# काठकोपनिषत्।

கடலங்குடியின்

# காடகோபநிஷத்

தமிழுரையுடன்



॥ श्रीकृष्णाय परस्मै ब्रह्मणे नमः ॥





# काठकोपनिषत् ।

॥ श्रीशाङ्करभाष्योपेता ॥

## காடகோபநிஷத்.

### தமிழுரையுடன்.

'உபநிஷத்' பதம் உண்டான விதம், அதன் பொருள், காரணம், விருந்தினரை உபசரிக்கும் விதம், ஸ்வர்க்க லோகத்தின் சிறப்பு, அவித்யை வித்யை இவற்றின் ஸ்வரூபம், ஆத்மாவைப் பற்றின விவரங்கள், காம நாசம், ஜீவன் முக்தி போன்ற பல ஆன்மீக விஷயங்கள் ஸ்ரீ சங்கரரின் பாஷ்யத்தைத் தழுவி விளக்கப்பட்டுள்ளன.

**ஆசிரியர் : ஜௌதிஷ, வைதிக, வ்யாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கத :**

**பிரம்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள்**

**தொகுப்பாசிரியர் :**

**Dr. K.N. சரஸ்வதி**

*M.A., M.S., M.Ed., Doctorate in Counselling, Diplomas in Naturopathy, Art, Yoga and Computer Science*

**பதிப்பாசிரியர் :**

**M.A. ஜெய்சங்கர்** *B.A., M.B.A*




**கடலங்குடி பப்ளிகேஷன்ஸ்**
**38, நடேச அய்யர் தெரு,**
**தி. நகர், (பஸ் ஸ்டாண்டு அருகில்)**
**சென்னை - 600 017.** ✆ 434 34 06



மூன்றாம் பதிப்பு

முந்தையப் பதிப்புகள் : 1933, 1995
மூன்றாம் பதிப்பு : ஜனவரி 1998



**விலை ரூ.60.00**

---

அச்சிட்டோர் :
**நொவினோ ஆ.'.ப்செட் பிரிண்டிங் கோ.,**
114, வெங்கட்ரங்கம் பிள்ளை தெரு,
ஐஸ் ஹவுஸ், சென்னை-600 005
☎ 8588471, 8548891



கடலங்குடி

பிரம்மஸ்ரீ நடேச சாஸ்திரிகள்

(1878 – 1961)



"JYOTHISHA KALANIDHI"

Dr. K.N. Saraswathy

*M.A., M.S., M.Ed., Doctorate in Counselling, Diplomas in Naturopathy, Art, Yoga and Computer.*



**போன் : 22115**

ஸ்ரீ சந்த்ர மௌளீச்வராய நம'.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்ய பரம்பராகத

ஸ்ரீ காஞ்சி காம கோடி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் அவர்கள்

ஸ்ரீ மடம் ஸம்ஸ்தானம்

**நெ 1. சாலை தெரு, காஞ்சிபுரம் 631502**

**முகாம் :**

**தேதி 6 : 9 : 95**

# ஸ்ரீ முகம்

ஆன்மிக துறைகளிலும், சாஸ்திரங்களிலும் ஆழ்ந்த அறிவு, கடினமான உழைப்பு இவைகளால் தனக்கென ஒரு ஸ்தானம் தேடிக் கொண்டவர் **கடலங்குடி நடேச சாஸ்திரிகள்.**

இவரால் முதன்முதலில் தேவநாகரி மூலத்துடனும், விரிவான தமிழாக்கத்துடனும் பதிப்பிக்கப்பட்ட ஸ்ரீமத் பாகவதத்துடன் இணைந்த ஸ்ரீ நாராயணீயம் (மூலமும், பதவுரையுடன் கூடியது) ப்ரம்ம சூத்ர ஸ்ரீ சங்கர பாஷ்யம், இதர வேதாந்த, உபநிடத்து கிரந்தங்களின் மறுபதிப்பில் இவரது புதல்வி **ஸ்ரீமதி கே.என். சரஸ்வதி** ஈடுபடுவது அறிந்து மகிழ்கிறோம்.

இம்முயற்சி. கு ஆஸ்திக அன்பர்கள் உதவி புரிந்து ஸ்ரீ பரமேச்வரனது ப்ரீதிக்குப் பாத்திரங்களாக ஆசீர்வதிக்கிறோம்.

**நாராயண ஸ்ம்ருதி :**

# முன்னுரை

உலகிலுள்ள பொருட்களை குணநலன், ஸ்வரூபம் ஆகியவைகளை நாம் இந்திரியங்கள் மூலமாக அறிகிறோம். சூக்ஷ்மமான (இந்திரியங்களுக்குப் புலப்படாத) விஷயங்களை தெய்வீக ஞானக்கண் படைத்த முனிவர்களால் படைக்கப்பட்ட வேதங்களின் மூலம் அறிகிறோம்.

வேதம் என்ற சொல் "வித்" என்ற வடமொழி பதத்திலிருந்து வெளிவந்தது. "வித்" என்றால் 'அறிதல்'. வேதம் என்றால் ஞானம் அல்லது 'அறிவு' எனப்பொருள். இந்துக்களுக்கு செயல் முறையில் பெரிதும் பயன்படும் மறை நூல்கள் 'வேதங்கள்'. அவை நான்கு வகைப்படும். ருக், யஜுஸ்,சாம, அதர்வணங்களாகும். இவை ஸ்மிருதிகள், இதிகாசங்கள், புராணங்கள், ஆகமங்கள், தரிசனங்கள் ஆகியவற்றிற்கு ஆதாரமானவை.

வேதத்தின் பிரிவு 'சாகை' எனப்படும். ஒவ்வொரு சாகையும் மந்திரம் பிராம்மணம் உபநிஷதம் என மூன்று பிரிவாக உள்ளது. அவற்றில் 'உபநிஷத்' என்பது 'வேதசிரஸ்' எனக்கூறப்படும். அது ஒவ்வொரு சாகையின் முடிவிலும் இருப்பதாகும். வேதங்கள் நான்காயினும், அவற்றில் பலகிளைகள் இருப்பதால் உபநிஷத்துக்கள் நூற்றுக்கும் மேற்பட்டதாகத் தோன்றின.

அவற்றில் மிகச் சிறப்பானவை, 1. ஈஸாவாஸ்ய உபநிஷத் 2. கேனோபனிஷத் 3. காடகோபனிஷத் 4. பிரஸ்னோபனிஷத் 5. முண்டகோபனிஷத் 6. மாண்டுக்யோபனிஷத் 7. ஐத்ரேயோபனிஷத் 8. தைத்திரீயோபனிஷத் 9. சாந்தோக்யோபனிஷத் 10. பிருஹதாரண்ய கோபனிஷத் 11.கௌசீத்கி உபனிஷத் 12. கவேஸ்வதாரஉபனிஷத் மிக முக்கியமானதாகும். உபநிஷத் துக்களை 'வேதாந்தம்' எனக்கூறுவர்.

மேற்கூறிய உபனிஷத்துக்களில் மூன்றாவதாகக் குறிக்கப்பட்ட "காடகோபனிஷத்" என்ற அரிய நுலை வேதாந்த சாகரத்தின் கரையைக் கண்ட பிரம்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரியார் அவர்கள் 1933வது வருடத்திலேயே முதற்பதிப்பாக ஸ்ரீசங்கரரின் வியாக்யானத்தைத் தழுவி தேவ நாகரி மூலத்துடனும், தமிழ்பதவுரை, விளக்க உரையுடனும் வெளியிட்டு ஆன்மீக, வேதாந்த உலகில் நீங்காத இடம் பெற்றார்.

அவ்வாறு புகழுடம்புடன் இன்றும் நம்மிடையே வாழ்ந்து வரும் கடலங்குடி பெரியவரின் திருமகளாகப் பிறந்தது ஒரு மகத்தான பாக்யமெனக் கருதுகிறேன். மேலும் அவர் எனது ஆன்மீக குருவுமாவார்.

பல ஆஸ்திகர்களின் இடைவிடாத வற்புறுத்தலினாலும், சாஸ்திர விற்பன்னர்களின் தூண்டுதலினாலுமே இந்த உயரிய நூலை 1995ஆம் வருடம்

இரண்டாவது பதிப்பாக 62 வருட இடைவெளிக்குப்பிறகு அச்சிட்டு வெளிக் கொண்டு வந்துள்ளேன். இடையில் பல வருடங்கள் இந்நூல் வெளிவராமல் காலதாமதமானதற்கு பலவித இடையூறுகள் தான் காரணம்.

கடலங்குடிப் பெரியவரின் உய்ரியநூலில் எந்தவித அச்சுப்பிழையோ, சொற்பிழையோ ஏற்பட்டு அன்னாரின் புகழிற்கு எந்தவித பங்கமும் ஏற்படக்கூடாது என்ற நோக்கில் இந்த நூலை ஆப்செட்டில் பிரசுரித்துள்ளோம்.

தற்சமயம் உள்ள பேப்பர் விலை, அச்சுக்கூலி, ஆட்கள் தொல்லை போன்ற தவிர்க்க முடியாத சூழ்நிலையில் இது ஒரு மகத்தான வேள்வியாகும். எல்லாவற்றிற்கும் மேலாக 'பொருளாதாரம்' குறிப்பிடத்தக்கது.

ஆயினும் கடலங்குடிப் பெரியவரின் அபிலாஷையைப் பூர்த்தி செய்வதையே முக்கிய குறிக்கோளாகக் கருதி அன்னாரின் அனுக்கிரஹத்தையும், பெரி யோர்களின் ஆசீர்வாதங்களையும் மூலதனமாக்கி இந்நூலை ஆன்மீக உலககிற்குப் படைக்கிறேன்.

இந்த வேள்வியில் அன்னாரின் பௌத்திரனும், எனது புத்திரனுமான சிரஞ்சீவி ஜெய்சங்கரின் ஆன்மீக உணர்வும், கடலங்குடிப் பெரியவரிடம் உள்ள பக்தியும், தொழிலில் உள்ள ஈடுபாடும், முயற்சியும் பெரிதும் குறிப்பிடத்தக்கது. சிரஞ்சீவி ஜெய்சங்கருக்கு ஆன்மீக பெரியோர்களின் ஆசியும், கடலங்குடிப் பெரியவரின் அனுக்கிரஹமும் பரிபூரணமாய்க் கிட்ட நான் பிரார்த்திக்கிறேன்.

இந்த நூலை கடலங்குடிப் பெரியவரின் பொற்பாதங்களில் குருகாணிக்கையாக சமர்ப்பிக்கிறேன். எமது இதர ஆன்மீக, ஜோதிட, கலாசார, ஸ்வயமுன்னேற்ற நூல்களுக்கு ஆதரவு அளித்து எம்மை இதுகாறும் ஊக்குவித்து வரும் ஆன்மீக வாசக உலகம் இந்நூலையும் ஆதரித்து பெரியவரின் அனுக்கிரஹத்தைப் பெற்று எல்லா வளமுடனும் வாழ நான் வணங்கும் ஸ்ரீதுர்கையம்மனைப் பிரார்த்திக்கிறேன்.

**Oct. 03, 1995**

கே.என். சரஸ்வதி.

விஜயதசமி

## விஷய அட்டவணை.



முதலத்தியாயம் இரண்டாவது வல்லீ.

விஷய அட்டவணை முற்றிற்று.



॥ ओं नमो भगवते वासुदेवाय ॥

# । काठकोपनिषत् ।

## श्रीशङ्करभाष्योपेता ॥

### प्रथमाध्याये प्रथमा वल्ली ॥



सह नाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु माविद्विषावहै । ओं शान्तिः, शान्तिः, शान्तिः ॥ ओं नमो भगवते वैवस्वताय मृत्यवे ब्रह्मविद्याचार्याय नचिकेतसे च ॥

अवतारिकाभाष्यम्—अथ काठकोपनिषद्वल्लीनां सुखार्थप्रबोधनार्थमल्पग्रन्था वृत्तिरारभ्यते । सदेर्धातोर्विशरणगत्यवसादनार्थस्योपनिपूर्वस्य

---

# காடகோபநிஷத்.

### முதலத்தியாயம், முதலாவது வல்லீ.



அவதாரிகா பாஷ்யம்.—ஹிரண்யகர்ப்பர்ரூபரான விவஸ்வானுடைய=(சூரியனுடைய) குமாரரும், பகவானும் ப்ரப்ஹவித்யாசார்யருமான மிருத்யுவுக்கும், நசிகேதஸ்ஸுக்கும் நமஸ்காரம்.

பின்னர் காடகோபநிஷத்திலுள்ள (ஆறு) வல்லிகளுக்கும் அனுயாஸமாகவே அர்த்த போதத்தை யுண்டாக்கவேண்டி அற்ப அக்ஷரஸங்கங்களையுடைய அதாவது:—மிக்கவிரிவில்லாத, உரையானது துவக்கப்படுகிறது. விசரணம் (நாசம்,) கதி, அவஸாதனம்(தளர்ச்சி)இவற்றைப் பொருளாகக் கொண்டதும் உப-நி-என்ற

क्विप्प्रत्ययान्तस्य रूपमुपनिषदिति। उपनिषच्छब्देन च व्याचिख्यासित-ग्रन्थप्रतिपाद्यवेद्यवस्तुविषया विद्योच्यते। केन पुनरर्थयोगेनोपनिषच्छब्देन विद्योच्यत इति? उच्यते। ये मुमुक्षवो दृष्टानुश्रविकविषयवितृष्णास्सन्त उपनिषच्छब्दवाच्यां वक्ष्यमाणलक्षणां विद्याम्, उपसद्य=उपगम्य, तन्निष्ठतया निश्चयेन शीलयन्ति तेषामविद्यादेः संसारबीजस्य विशरणात्=हिंसनात् विनाशनात् इत्यनेनार्थयोगेन विद्या उपनिषदित्युच्यते। तथाच वक्ष्यति—"निचाय्य तं मृत्युमुखात्प्रमुच्यते" इति॥ पूर्वोक्तविशेषणा-

---

பதங்களை முன்னதாகக் கொண்டதும், **क्विप्**=(க்விப்) என்ற ப்ரத்யயத்தை முடிவில் கொண்டதுமான **सद्**=என்ற தாதுவினுடைய ரூபம் **उपनिषत्**=என்பது. இந்த உபநிஷத் சப்தத்தினல் வியாக்கியானஞ் செய்யவிரும்பப்பட்ட கிரந்தத்தினல் விளக்கப்படுவதும் வேத்யமுமான பொருளைவிஷயமாகக் கொண்ட வித்யையானது சொல்லப்படுகிறது. எந்தப் பொருளின் சேர்க்கையைக் கொண்டு உபநிஷத் சப்தத்தினல் வித்யை சொல்லப்படுகிறது எனின்? பதில் சொல்லப்படுகிறது. அதாவது: மோக்ஷத்தை யடையவிருப்பமுள்ள எவர் நேரில் காணப்பட்டதும், வேதத்தினல் அறியப்பட்டதுமான விஷயத்தில் பற்றில்லாதவர்களாய்க் கொண்டு உபநிஷத் சப்தத்தாற் சொல்லப்படுவதும் பின்னர் சொல்லப்படப் போகும் லக்ஷணம்வாய்ந்ததுமான ப்ரம்ஹவித்யையை அடைந்து அதிலேயே ஈடுபட்டவர்களாக இருந்து நிஶ்சயத்துடன் பரிசீலனம் செய்து வருகின்றனரோ அவர்களின் ஸம்ஸாரபீஜமான அவித்யாதியை விசரணம் செய்வது அதாவது: ஹிம்ஸிப்பது (நாசஞ்செய்வது) என்ற இந்தப்பொருளின் சேர்க்கையினல் ப்ரம்ஹவித்யை உபநிஷத் என்று சொல்லப்படுகிறது. அவ்விதமே "அந்த ப்ரம்ஹத்தை ஸாக்ஷாத்கரித்து மிருத்யுமுகத்தினின்றும் (ஜனனமரணங்களுக்கு மூலகாரணமான அவித்யையினின்றும்) விடுபடுகிறான்" என ஶ்ருதி சொல்லவும் போகிறது. அல்லது * முன்னர்கூறின அடைமொழியுடன் கூடினவர்களான முமுக்ஷுக்களை ப்ரம்ஹத்தை யடையச்

---

* षद्=என்ற தாதுவுக்கு கதி என்ற பொருள் கொண்டு இது முதல் கூறப்படுகிறது.

न्मुमुक्षून्वा परं ब्रह्म गमयतीति ब्रह्मगमयितृत्वेन योगाद्ब्रह्मविद्या उपनिषत् । तथाच वक्ष्यति—"ब्रह्मप्राप्तो विरजोऽभूद्विमृत्युः" इति ॥ लोकादिर्ब्रह्मजज्ञो योऽग्निस्तद्विषयाया विद्याया द्वितीयेन वरेण प्रार्थ्यमानायाः स्वर्गलोकफलप्राप्तिहेतुत्वेन गर्भवासजन्मजराद्युपद्रववृन्दस्य लोकान्तरे पौनः पुन्येन प्रवृत्तस्यावसादयितृत्वेन=शैथिल्यापादनेन धात्वर्थयोगादग्निविद्यापि 'उपनिषत्' इत्युच्यते । तथाच वक्ष्यति—"स्वर्गलोका अमृतत्वं भजन्ते" इत्यादि ॥

ननु च उपनिषच्छब्देनाध्येतारो ग्रन्थमप्यभिलपन्ति "उपनिषदमधी-

---

செய்கிறது என்பதுபற்றியாவது ப்ரம்ஹத்தையடையச் செய்தல் என்றபொருளுடன் சேர்க்கையேற்படுவதால் ப்ரம்ஹவித்யை உபநிஷத்தாகும். அவ்விதமே சுருதி "வித்யையினுல் ப்ரம்ஹத்தையடைந்தவன் அக்ஞானசூன்யனுகவும் மரணுேபலக்ஷித ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டவனுகவும் ஆகிவிட்டான்" எனச் சொல்லவும் போகிறது. அல்லது (*) லோகத்துக்கு ஆதியும், ஹிரண்யகர்ப்பரிடமிருந்துண்டானவனும் ஸர்வக்ஞனுமான யாதொரு அக்னியுண்டோ அவனைவிஷயமாகக் கொண்டதும் இரண்டாவதுவரனுல் ப்ரார்த்திக்கப்படுகின்றதுமான வித்யையானது ஸ்வர்க்கலோகரூமான பலப்ராப்த்திக்கு ஹேதுவாகவாவதுபற்றி லோகாந்தரத்தில் அடிக்கடி ப்ரவிருத்திக்கின்ற கர்ப்பவாஸம் பிறவி ஜரை முதலிய உபத்திரவஸமூஹத்தை அவஸாதனஞ்செய்தல் (தளர்ந்துபோகும்படிசெய்தல்) என்ற தாதுவின்பொருள் பொருத்தமாகின்றபடியால் (அந்த) அக்னிவித்யையும் கூட உபநிஷத் என்று சொல்லப்படுகிறது. அவ்விதமே "ஸ்வர்க்கலோகத்தை யடைந்து அமிருதத்வத்தை யடைகின்றனர்" என்றதாதியால் சுருதி சொல்லவும் போகின்றது.

சங்கை—அத்யயனஞ்செய்பவர் உபநிஷத் என்ற சப்தத்தினுல் கிரந்தத்தையும் கூடவன்ருே சொல்லுகின்றனர். அதாவது—"உபநிஷத்தை அத்யயனஞ்செய்கின்ருேம், பிறர்க்குச் சொல்லியுங் கொடுக்கின்ருேம்" என்ருும் எனின்?

---

(*) षद्=என்ற தாதுவுக்கு அவஸாதனம் என்ற பொருள் கொண்டு இதுமுதல் கூறப்படுகிறது.

महेऽध्यापयामः" इति च । एवं नैष दोषः। अविद्यादिसंसारहेतुविशरणादेः सदिधात्वर्थस्य ग्रन्थमात्रेऽसंभवाद्विद्यायां च संभवात्, ग्रन्थस्यापि तादर्थ्येन तच्छब्दत्वोपपत्तेः "आयुर्वै घृतम्" इत्यादिवत्। तस्माद्विद्यायां मुख्यया वृत्त्या उपनिषच्छब्दो वर्तते, ग्रन्थे तु भक्त्येति॥ एवमुपनिषन्निर्वचनेनैव विशिष्टोऽधिकारी विद्यायामुक्तः। विषयश्च विशिष्ट उक्तो विद्यायाः परं ब्रह्म प्रत्यगात्मभूतम्। प्रयोजनं चास्या उपनिषद आत्यन्तिकी संसारनिवृत्तिर्ब्रह्मप्राप्तिलक्षणा। संबन्धश्च एवं भूतप्रयोजनेनोक्तः। अतो यथोक्ताधिकारिविषयप्रयोजनसंबन्धाया विद्यायाः करतलन्यस्तामलकवत्प्रकाशकत्वेन विशिष्टाधिकारिविषयप्रयोजनसंबन्धा एता वल्ल्यो भवन्तीति। अतस्ता यथाप्रतिभानं व्याचक्ष्महे—

---

உத்தரம்—இவ்விதமிந்தத் தோஷம் வரமாட்டாது. षद्=(ஷத்) என்ற தாதுவின் பொருளான அவித்யாதிகளாகிற ஸம்ஸாரகாரணத்தின் விசரணம் (நாசம்) முதலியன கிரந்தமாத்திரத்தில் ஸம்பவிக்காதாகையாலும், வித்யையில் ஸம்பவிக்குமாதலாலும் கிரந்தமும் அத்தகைய வித்யையை உண்டுபண்ணுவதா யிருப்பதிலிருந்து உபநிஷத் என்ற சப்தத்தால் சொல்லப்படுவது பொருத்தமானதேயாகும். "* ஆயுளே நெய்" என்றதாதி(ப்ரயோகம்)போலவேயாம். ஆகவே உபநிஷத் சப்தமானது சக்திமுறையால் வித்யையையும், லக்ஷணைமுறையால் கிரந்தத்தையும் சொல்லுகிறது என்றேற்பட்டது. இவ்விதம் உபநிஷத் சப்தத்தைப்பிரித்துப் பொருள்கொண்டதிலிருந்தே வித்யையில் சிறந்த அதிகாரி சொல்லப்பட்டவனாகிறான். ப்ரத்யகாத்மபூதமான பரம்ப்ரம்ஹமானது வித்யைக்குச் சிறந்த விஷயம் என்பதும் சொல்லப்பட்டதாகிறது. ப்ரம்ஹ ப்ராப்திரூபமான ஆத்யந்திக ஸம்ஸாரநிவிருத்தியானது இந்த உபநிஷத்துக்கு ப்ரயோஜனமாகும். ஸம்ஸாரநிவிருத்தி ரூபமான ப்ரயோஜனத்தினால் ஸம்பந்தமும் சொல்லப்பட்டதாகவாகிறது. ஆனது பற்றி

---

* நெய்யினால் ஆயுள் பெருக்கேற்படுவதை யொட்டி "ஆயுளே நெய்" என காரியகாரண அபேதமுறையால் சொல்லப்படுவது எவ்விதமோ அவ்விதமே கிரந்தமானது உபநிஷத்தை (வித்யையை) உண்டுபண்ணுவதால் உபநிஷத் என்றே சொல்லப்படுகிறது என்பது கருத்து.

उशन् ह वै वाजश्रवसः सर्ववेदसं ददौ ।
तस्य ह नचिकेता नाम पुत्र आस ॥ १ ॥

---

சொல்லப்பட்ட அதிகாரி, விஷயப், ப்ரயோஜனம், ஸம்பந்தம் இவற்றையுடையதான வித்யையை உள்ளங்கையில் வைக்கப்பட்ட நெல்லிக்கனியைப் போல ப்ரகாசப் படுத்துவனபற்றி இந்தவல்லிகள் சிறந்த அதிகாரி விஷயம் ப்ரயோஜனம் ஸம்பந்தம் இவற்றையுடையனவாகவே ஆகிவிடுகின்றன என்றும். ஆகவே அந்த வல்லிகளை * யறிந்துகொண்டவளவு வியாக்கியானஞ் செய்கிறோம்.—

அவதாரிகை—இந்த உபநிஷத்தானது யமதர்மராஜனுக்கும் நசிகேதஸ் என்ற ருஷிகுமாரனுக்கும் நடந்த ஸம்வாதரூபமாகவுள்ளது. இதில் இரண்டு அத்தியாயங்களும் ஒவ்வொரு அத்தியாயத்திலும் மூன்றுவல்லிகள்வீதம் மொத்தம் ஆறுவல்லிகளுமுள்ளன. அவற்றுள் முதலாவது அத்தியாயம் முதலாவதுவல்லியில் 29 மந்திரங்களும், இரண்டாவதுவல்லியில் 25 மந்திரங்களும், மூன்றுவது வல்லியில் 17 மந்திரங்களும், இரண்டாவது அத்தியாயம் முதலாவதுவல்லியில் 14 மந்திரங்களும், இரண்டாவதுவல்லியில் 15 மந்திரங்களும், மூன்றுவதுவல்லியில் 19 மந்திரங்களுமாக மொத்தம் 119 மந்திரங்களடங்கி யிருக்கின்றன. அவற்றுள் முதலாவது அத்தியாயம் 1-வதுவல்லியின் முதல்மந்திரத்தின் பொருள் பின்வருமாறு—

(ப—ரை) **हवै**=முன்னர் ஒருஸமயம், **वाजश्रवसः**=அன்னதானநிமித்தமான கீர்த்தியையடைந்துள்ளவராகவோ, அல்லது வாஜஸ்ரவஸ் என்ற பெயருள்ளவராகவோ இருப்பவரின் புத்திரரான வாஜஸ்ரவஸர் என்ற மஹருஷியானவர் **उशन्**=(தன்னிடமுள்ள எல்லாப்பொருளையும் தக்ஷிணையாகக் கொண்ட விஶ்வஜித் என்றயாகத்தைச் செய்து அதன்) பயனில் மிக்கவாசை கொண்டவராய் (அந்த யாகத்தில்) **सर्ववेदसम्**=தன்னிடமுள்ள எல்லாப்பொருளையும் **ददौ**=தக்ஷிணையாகக் கொடுத்தார். **तस्य**=அந்த யஜமானனுக்கு **नचिकेता नाम**=நசிகேதஸ் என்ற ப்ரசித்தியுள்ள **पुत्रः**=புத்திரன் **आस ह**=இருந்தானன்றோ? (1) (எ—று)

---

* இதனால் அடக்கம் கூறப்பட்டதாகிறது.

तत्राख्यायिका विद्यास्तुत्यर्था ॥ उशन्=कामयमानः। हवा इति वृत्तार्थस्मरणार्थौ निपातौ। वाजम्=अन्नं तद्दानादिनिमित्तं, श्रवः=यशः यस्य स वाजश्रवाः, रूढितो वा तस्यापत्यं वाजश्रवसः किल विश्वजिता सर्वमेधेन ईजे तत्फलं कामयमानः। स तस्मिन् क्रतौ, सर्ववेदसम्=सर्वस्वम् धनं ददौ=दत्तवान्। तस्य=यजमानस्य ह, नचिकेता नाम पुत्रः किल, आस=बभूव ॥ १ ॥

**तँह कुमारँसन्तं दक्षिणासु नीयमानासु श्रद्धाऽऽविवेश, सोऽमन्यत ॥ २ ॥**

तंह=नचिकेतसम, कुमारम्=प्रथमवयसं सन्तमप्राप्तप्रजननशक्तिं बा-

---

பாஷ்யம்.—அந்தவல்லிகளில் காணப்படும் கதையானது வித்யையை ஸ்துதிக்கவேண்டி யேற்பட்டது. **उशन्**=பலகாமனையுள்ள, மூலத்திலுள்ள **हवा**=என்றபதங்கள் முன்னர் நடந்தவிஷயத்தை நினைவூட்டும் நிபாதங்களாகும். **वाजश्रवाः**=வாஜம் என்பது அன்னமாகும். அதன் தானாதிகளை நிமித்தமாகக் கொண்ட **श्रवः**=கீர்த்தியானது எவருக்கு இருக்கிறதோ அவர் வாஜஸ்ரவஸ் ஆவார். அவ்லது ரூடி முறையை யொட்டி **वाजश्रवाः** என்பது பெயராகவாகலாம். அவருடைய அபத்யம்=(புத்திரன்) **वाजश्रवसः** வாஜஸ்ரவஸராவர். அவரோ **सर्वमेधेन**=தன்னிடமுள்ள பொருள் யாவையும் தக்ஷிணையாகக் கொண்ட விஸ்வஜித் என்றயாகத்தினல் அந்தவிஸ்வஜித்தின் பலனை விரும்பினவராய் யஜித்தார். அந்தயாகத்தில் **सर्ववेदसम्**=ஸர்வசொத்தான தனத்தையும் **ददौ**=கொடுத்தார். அந்த யஜமானனுக்கு நசிகேதஸ் எனப்பெயருள்ள புத்திரன் **किल**=ப்ரஸித்தனுக இருந்தான்.(1)

(ப—ரை) **कुमारम्**=இளம் வயதுள்ளவனுக (ப்ரஜோத்பாதன விஷயத்தில் சக்தியையடையாதவனுக) **सन्तम्**=இருக்கின்ற **तंह**=அந்த நசிகேதஸ்ஸை **दक्षिणासु**=ருத்விக்குகள் ஸபையிலுள்ளோர் இவர்களையும் பொருட்டு தக்ஷிணைகள் **नीयमानासु**=கொடுக்கப்படுங்கால் **श्रद्धा**=(பிதாவுக்கு நன்மையேற்படவேண்டுமென்ற விருப்பத்தாலேற்பட்ட) ஆஸ்திக்யபுத்தியானது **आविवेश**=வந்தடைந்தது. **सः**=அந்த நசிகேதஸ் **अमन्यत**=பின்வருமாறு எண்ணலானுர். (2)

लमेव, श्रद्धा=आस्तिक्यबुद्धिः पितुर्हितकामप्रयुक्ता, आविवेश=प्रविष्टवती । कस्मिन् काल इत्याह—ऋत्विग्भ्यः सदस्येभ्यश्च दक्षिणासु नीयमानासु=विभागेनोपनीयमानासु । दक्षिणार्थासु गोषु सः=आविष्टश्रद्धो नचिकेता अमन्यत ॥ २ ॥ कथमिति?

**पीतोदका जग्धतृणा दुग्धदोहा निरिन्द्रियाः ।**
**अनन्दा नाम ते लोकास्तान्स गच्छति ता ददत् ॥ ३॥**

उच्यते । पीतोदका इत्यादिना दक्षिणार्था गावो विशेष्यन्ते । पीत-

---

பாஷ்யம் —**कुमारं सन्तम्**=முதல்வயதுள்ளவனாக, ப்ரஜையையுண்டுபண்ணும் விஷயத்தில் சக்தியையடையாது பாலனாகவே இருக்கின்ற அந்த நசிகேதஸ்ஸை **श्रद्धा**=பிதாவினுடைய ஹிதத்திலுள்ள விருப்பத்தாலேற்பட்ட ஆஸ்திக்கிய புத்தியானது **आविवेश**=ப்ரவேசித்தது. எந்தக்காலத்தில் எனின்? சுருதி சொல்லுகிறது. ருத்விக்குகள், ஸபையிலுள்ளவர் இவர்களுக்குத் தக்ஷிணைகள் பங்கிட்டுக் கொடுக்கப்படுங்கால் என்றும். தக்ஷிணைக்கு வேண்டிய பசுக்கள் விஷயத்தில் உண்டான ஶ்ரத்தையையுடைய அந்த நசிகேதஸ் எண்ணலானார். (2) (எ—று)

(ப—ரை) **पीतोदकाः**=முன்னர் குடிக்கப்பட்ட ஜலத்தையுடையனவும், **जग्धतृणाः**=முன்னர் தின்னப்பட்ட புல்லையுடையனவும், **दुग्धदोहाः**=முன்னர் கறக்கப்பட்ட பாலையுடையனவும், **निरिन्द्रियाः**=கன்றுபோடும் சக்தியற்றனவுமான **ताः**=அந்தப் பசுக்களை (**यः**=எவன்) **ददत्**=ருத்விக் முதலியோருக்குக் கொடுக்கின்றானோ **सः**=அவன் **अनन्दा नाम**=ஆனந்தமற்ற (சுகமற்ற) வைகளென **ते**=ப்ரஸித்தங்களான (**ये**=எந்த) **लोकाः**=உலகங்களுண்டோ **तान्**=அவற்றை **गच्छति**=அடைகின்றான். (3) (எ—று)

பாஷ்யம்.—எவ்வித மாலோசித்தானெனின்? சொல்லப்படுகிறது. **पीतोदकाः**என்றதாதியால் தக்ஷிணையாகக் கொடுக்கவிரும்பப்பட்ட பசுக்கள் விலக்கிக் காட்டப்படுகின்றன. **पीतोदकाः**=* எவற்

---

* தக்ஷிணையாகக் கொடுப்பதற்குமுன் ஏதோ வொருஸமயத்தில் ஜலம் குடித்தும், புல்லைத் தின்றும், பாலைக்கறந்தும், கன்றுகளை ஈன்றும் வந்தனவே அன்றி தானம் கொடுத்தபின்னர் முற்கூறியபடி ஒன்றையும் செய்யச் சக்தியற்றக் கிழட்டுப் பசுக்களைக் கொடுக்கப் பிதா உத்தேசித்தார் என்பது கருத்து.

मुदकं याभिस्ताः पीतोदकाः। जग्धं भक्षितं तृणं याभिस्ता जग्धतृणाः। दुग्धो दोहः क्षीराख्यः=यासां ता दुग्धदोहाः। निरिन्द्रियाः=अप्रजननसमर्था जीर्णा निष्फला गाव इत्यर्थः, याःस्ताः=एवं भूता गाः ऋत्विग्भ्यो दक्षिणाबुद्ध्या ददत्=प्रयच्छन्, अनन्दाः=अनानन्दाः, असुखानामेत्येतत्। ये ते लोकास्तान्सः=यजमानो गच्छति ॥ ३ ॥

स होवाच पितरं तत कस्मै मां दास्यसीति।
द्वितीयं तृतीयं तँ होवाच मृत्यवे त्वा ददामीति ॥ ४ ॥

तदेवं ऋत्वसंपत्तिनिमित्तं पितुरनिष्टं फलं मया पुत्रेण सता निवारणीयमात्मप्रदानेनापि ऋतुसंपत्तिं कृत्वा=इत्येवं मत्वा पितरमुपगम्य सहोवाच

---

ரால் முன்னர் ஜலம் குடிக்கப்பட்டதோ அவை பீதோதகங்களாகும், **जग्धतृणाः**=எவற்றால் முன்னர் புற்கள் பக்ஷிக்கப்பட்டனவோ அவை ஜக்ததிருணங்களாகும். **दुग्धदोहाः**=எவற்றால் முன்னர் க்ஷீரமெனப் பெயரிய தோஹமானது கறக்கப்பட்டதோ அவை துக்த்ததோஹங்களாகும். **निरिन्द्रियाः**= ப்ரஜோத்பாதனவிஷயத்தில் ஸமர்த்தங்களாக இல்லாத அதாவது: கிழடுகளான=எவ்விதப் பயனுமற்ற பசுக்கள் எவையுண்டோ என்பது பொருள். **ताः**=இவ்விதங்களான பசுக்களை ருத்விக்குகளையும் பொருட்டு தக்ஷிணையென்ற புத்தியுடன், **ददत्**=கொடுப்பவன் **अनन्दाः**=ஆனந்தமற்ற சுகமற்ற என்பது பொருள். யாதொரு அந்த லோகங்களுண்டோ அவற்றை **सः**= அந்த யஜமானன் அடைகிறான். (3) (எ—று)

(ப—ரை) **सः**=அந்த நசிகேதஸ்ஸானவர் **हेतत!**=ஓய்தந்தையே! **माम्**=என்னை **कस्मै**=எவனையும் பொருட்டு **दास्यसि**=கொடுக்கப் போகின்றீர் **इति**=என **पितरम्**=பிதாவான வாஜஸ்ரவஸரை **उवाच ह**= கேட்டான். பிதா பதில் சொல்லாது போயினுங்கூட **द्वितीयम्**= இரண்டாவது தடவையும் **तृतीयम्**=மூன்றுவது தடவையும் கேட்டான். இவ்விதம் கேட்கப்பட்ட பிதாகோபங்கொண்டு **मृत्यवे**=யமனையும் பொருட் **त्वा**=உன்னை **ददामि**=கொடுக்கிறேன் **इति**=என்று **तम्**=அந்த நசிகேதஸ்ஸைப் பார்த்து **उवाच ह**=சொன்னார். (4)

பாஷ்யம்.—ஆனதுபற்றி இவ்விதம் யாகபூர்த்தியேற்படாமையை நிமித்தமாகக் கொண்டு பிதாவுக்கு ஏற்படும் அனிஷ்டபலனை

पितरं हे तत=तात, कस्मै=ऋत्विग्विशेषाय दक्षिणार्थं मां दास्यसि=प्रयच्छसीत्येतत् । एवमुक्तेन पित्रोपेक्ष्यमाणोऽपि द्वितीयं तृतीयमप्युवाच—'कस्मै मां दास्यसि, कस्मै मां दास्यसि' इति । नायं कुमारस्वभाव इति क्रुद्धस्सन्पिता तं ह=पुत्रं किलोवाच मृत्यवे=वैवस्वताय त्वा=त्वां ददामीति॥

बहूनामेमि प्रथमो बहूनामेमि मध्यमः ।
किंस्विद्यमस्य कर्तव्यं यन्मयाद्य करिष्यति ॥ ५ ॥

---

னது புத்திரனுக இருக்கும் என்னுல் சரீரத்தைக் கொடுத்தேனும் யாகபூர்த்தியைச் செய்துவைக்கும வாயிலாகப் போக்கத்தக்கது என இவ்விதமெண்ணிக் கொண்டு பிதாவினருகில் வந்து அவன் "हेतत! ஹே பிதாவே எந்தருத்விக் விசேஷத்தையும் பொருட்டு என்னைத் தக்ஷிணைக்குவேண்டி (தக்ஷிணைக்குப் பதிலாக) *दास्यसि=கொடுக்கப்போகின்றீர்" எனப் பிதாவைக் கேட்டான். இவ்விதம் கேட்கப்பட்ட பிதாவினுல் உபேக்ஷிக்கப்படினுங்கூட "என்னை யாருக்குக் கொடுக்கிறீர், என்னை யாருக்குக் கொடுக்கிறீர்" என இரண்டாவதுதடவையும் மூன்ருவதுதடவையும் கேட்டான். இவன் குமார (குழந்தை) னுக்குரிய ஸ்வபாவமுள்ளவனுக இல்லை எனக் கோபங்கொண்ட தகப்பன் "मृत्यवे=ஸூரியகுமாரஞன யமனுக்கு உன்னைக்கொடுக்கிறேன்" என அந்தப் புத்திரனைப் பார்த்துச் சொன்னுர் (4) (எ–று)

(ப–ரை) बहूनाम्=முதல்தரத்திலுள்ள பலர்களுக்குள் प्रथमः=முதன்மைபெற்றவனுக एमि=நடந்துவருகின்றேன். बहूनाम्=நடுநிலையிலுள்ள பலர்களுக்குள் मध्यमः=நடுநிலைமையிலுள்ளவனுகவுமே एमि=நடந்து வருகின்றேன். यमस्य=யமனுக்கு कर्तव्यम्=செய்யவேண்டிய किंस्वित्=எந்த ப்ரயோஜனத்தை मया=தானஞ்செய்யப்பட்ட என்னைக் கொண்டு करिष्यति=செய்துமுடிக்கப் போகிறுர். अद्य=இப்பொழுது कर्तव्यम्=செய்யத்தக்கது यत्=யாதிருக்கிறது என வாலோசித்தான். (5) (எ–று)

---

* மூலத்தில் दास्यसि=என்றதால் எதிர்காலம் சொல்லப்படினுங்கூட प्रयच्छसि=இதுபோழ்து கொடுக்கிறீர் என நிகழ்காலப் பொருளே கொள்ளவேண்டும் என்பது பாஷ்யத்தின் கருத்து.

स एवमुक्तः पुत्र एकान्ते परिदेवयाञ्चकार कथमिति?। उच्यते। बहूनां शिष्याणां पुत्राणां वा एमि=गच्छामि, प्रथमः सन् मुख्यया शिष्यादिवृत्त्येत्यर्थः। मध्यमानां च बहूनां मध्यमः=मध्यमयैव वृत्त्या एमि। नाधमया कदाचिदपि। तमेवं विशिष्टगुणमपि पुत्रं मां 'मृत्यवे त्वा ददामि' इत्युक्तवान्पिता। स किंस्विद्यमस्य कर्तव्यं=प्रयोजनं मया प्रत्तेन करिष्यति यत्कर्तव्यमद्य। नूनं प्रयोजनमनपेक्ष्यैव क्रोधवशादुक्तवान्पिता। तथापि

---

பாஷ்யம்.—இவ்விதம் பிதாவினால் சொல்லப்பட்ட அந்தப் புத்திரன் தனிமையான விடத்திலிருந்து நீண்டவாலோசனை செய்யத் தொடங்கினன். எவ்விதமெனின்? சொல்லப்படுகிறது. **बहूनाम्=** பலசிஷ்யர்களுக்குள்ளோ, புத்திரர்களுக்குள்ளோ **प्रथमस्सन्=** முதலாவதாக இருந்துகொண்டு அதாவது:—* முக்கியமான சிஷ்யாதி ப்ரவிருத்தியுடனேயே என்பது பொருள். நடந்து வருகின்றேன். நடுநிலைமையிலுள்ள பலர்களுக்குள்ளும் நடுநிலைமையிலிருப்பவனாகவே அதாவது:—நடுநிலை(*)மையிலுள்ள ப்ரவிருத்தியுடனேயே என்றும். நடந்துவருகின்றேன். † தாழ்ந்த ப்ரவிருத்தியுடன் ஒருபொழுதும் நடந்துவந்ததில்லை. இவ்விதம் சிறந்தகுணமுள்ளவனும் புத்திரனுமான அந்த என்னைக் கூட "மிருத்யுவுக்கு உன்னைக் கொடுக்கிறேன்" எனப் பிதாசொன்னாரே? தானஞ்செய்யப்பட்ட என்மூலமாகச் செய்யவேண்டிய எதை இப்பொழுது யமன் விஷயத்தில் செய்யப்போகிறாரோ செய்யவேண்டிய அந்த ப்ரயோஜனம் இப்பொழுது என்னவிருக்கிறது?. (ஒன்றுமே இல்லை என்பது கருத்து) ப்ரயோஜனத்தை எதிர்பாராமலே கோபவசத்தால் பிதா சொன்னார் என்பது நிச்சயம். ஆயினும் அந்தப் பிதாவின் வார்த்தை வீண்போகக் கூடாதென இவ்விதமெண்ணிக்கொண்டு "என்னால் ஏன் இவ்விதம் சொல்லப்பட்டது" எனச் சோகாவிஷ்ட

---

* குருவின் ஸமயமறிந்து தக்கபடி சுச்ரூஷையில் ப்ரவிருத்திப்பது என்பது பொருள். (*) குருவின் ஆக்ஞாதிகளை முன்னிட்டு சுச்ரூஷணத்தில் ப்ரவிருத்திப்பது என்பது பொருள். † குருமுதலியோரால் கோபிக்கப்பட்டவனாய்க் கொண்டு சுச்ரூஷணத்தில் ப்ரவிருத்திக்காதிருத்தல் என்பது பொருள்.

तत्पितुर्वचो मृषा माभूत् इत्येवं मत्वा परिदेवनापूर्वकमाह पितरं शोकाविष्टं किं मयोक्तमिति ॥ ५ ॥

**अनुपश्य यथा पूर्वे प्रतिपश्य तथापरे ।**
**सस्यमिव मर्त्यः पच्यते सस्यमिवाऽऽजायते पुनः ॥६॥**

अनुपश्य=आलोचय निभालय अनु=क्रमेण, यथा=येन प्रकारेण वृत्ताः पूर्वे=अतिक्रान्ताः पितृपितामहादयस्तव । तान्दृष्ट्वा च तेषां वृत्तमास्थातुमर्हसि, वर्तमानाश्चापरे साधवो यथा वर्तन्ते तांश्च प्रतिपश्य=आलोचय तथा । नच तेषु मृषाकरणं वृत्तं वर्तमानं वास्ति । तद्विपरीतमसतां च

---

ரான பிதாவைப்பார்த்து அழுதுகொண்டு சொல்லத்தொடங்குகிறான். (5) (எ-று)

(ப-ரை) **पूर्वे**=பிதா, பிதாமஹன் முதலியோர், **अनु**=முறையே **यथा**=எம்மாதிரியாக இருந்தனரோ அம்மாதிரியை **पश्य**=நன்கு ஆலோசனை செய்துபாரும். **अपरे**=இதுபோழ்துள்ள ஸாதுக்கள் எவ்விதமிருக்கின்றனரோ அம்மாதிரியையும் **तथा**=அவ்விதமே **प्रतिपश्य**=ஆலோசித்துப்பாரும். **मर्त्यः**=மனிதன் **सस्यमिव**=பயிரானது போல **पच्यते**=ஜீர்ணனாகவாகி விடுகிறான். அதாவது: மரித்து விடுகிறான் என்றும். **पुनः**=திரும்பவும் **सस्यमिव**=பயிரைப் போலவே **आजायते**=ஜனனத்தையுமடைகிறான். (6) (எ-று)

பாஷ்யம்.—**पश्य**=பாரும், அதாவது:—ஆலோசித்துப் பாரும். **अनु**=முறையே, காலஞ்சென்றவர்களான உமது பிதா, பிதாமஹன் முதலியோர் எந்தப் பிரகாரத்தினால் நடந்தனரோ(அதாவது: சொந்த தர்மமான ஸத்தியவசனாதிகளில் வழுவாது இருந்தனரோ என்றும்) அவர்களைப் பார்த்துக் கொண்டு அவர்களின் விருத்தத்தை=(ஸத்திய வசனாதியை)அடைவதற்கு அர்ஹராகிறீர். வர்த்தமான காலத்திலுள்ள மற்றஸாதுக்கள் எவ்விதமிருக்கின்றனரோ அவர்களையும் அவ்விதமே ஆலோசித்துப் பாரும். அவர்களிடத்தில் பொய்பேசுதலானது முன்னர் நிகழ்ந்ததாகவோ, இப்பொழுது நிகழ்வதாகவோ இருக்கவில்லை. அதற்கு நேர்மாறான பொய்பேசுதலானது அஸாதுக்களின் செய்கையாகும். பொய்சொல்லி ஒருவனும் ஜரை மரணம் இவைகளற்றவனாக வாகமாட்டானன்றோ? ஏன்? மனிதன்

वृत्तं मृषाकरणम् । नच मृषाकृत्वा कश्चिदजरामरो भवति । यतः सस्य-मिव मर्त्यः=मनुष्यः पच्यते=जीर्णो म्रियते । मृत्वा च सस्यमिव, आ-जायते=आविर्भवति पुनः। एवमनित्ये जीवलोके किं मृषाकरणेन । पाल-यात्मनः सत्यं, प्रेषय मां यमायेत्यभिप्रायः॥ ६ ॥

वैश्वानरः प्रविशत्यतिथिर्ब्राह्मणो गृहान् ।
तस्यैताꣳशान्तिं कुर्वन्ति हर वैवस्वतोदकम् ॥ ७ ॥

स एवमुक्तः पिताऽऽत्मनः सत्यतायै प्रेषयामास । सच यमभवनं गत्वा तिस्रो रात्रीरुवास यमे प्रोषिते । प्रोष्यागतं यमममात्या भार्या वा ऊचुर्बोधयन्तः, वैश्वानरः=अग्निरेव साक्षात्प्रविशत्यतिथिस्सन्ब्राह्मणो

---

பயிர்போல ஜீர்ணனாகிறான் (மரிக்கிறான்) மரித்தபின்னரும் பயிரைப் போலவே திரும்பவும் ஆவிர்ப்பாவத்தையும்=உத்பத்தியையும், அன்றே அடைகிறான். ஆகவே இவ்விதம் ஜீவஸமூஹமானது அநித்ய மாக (நிலையற்றதாக) இருக்கும்பொழுது பொய்சொல்லுவதால் யாதுபயன். தன்னுடைய ஸத்தியத்தைக் காப்பாற்றும். என்னை யமனையும் பொருட்டு அனுப்பும் என்பது கருத்து. (6) (எ–று)

(ப–ரை) अतिथिः=அதிதியாகவுள்ள, ब्राह्मणः=ப்ராம்ஹணன், वैश्वानरः=அக்னியாகவே गृहान्=வீட்டில் प्रविशति=நுழைகிறான். तस्य=அதிதிப்ராம்ஹணரூபமான அக்னிக்கு एताम्=பாத்யம் ஆஸனங் கொடுத்தல் ரூபமான शान्तिम्=சாந்தியை कुर्वन्ति=ஸாதுக்கள் செய்கின்றனர். ஆதலால் वैवस्वत !=ஓ யமனே ! उदकम्=பாத்யத்துக்கு வேண்டிய ஜலத்தை, हर=கொண்டுவந்து கொடும் என மந்திரிகளோ மனையாளோ சொல்லினர். (7) (எ–று)

பாஷ்யம்.—இவ்விதஞ் சொல்லப்பட்ட அந்தப் பிதா தன்னுடைய ஸத்தியத்தன்மைக்கு வேண்டி (அவனை) அனுப்பினார். அந்த நசிகேதஸ் யமன்வீட்டை யடைந்து யமன் வீட்டிலில்லாதபொழுது மூன்றிரவுகள் (அங்கு) வசித்தான். வெளியிற் சென்று திரும்பிவந்த யமனைப் பார்த்து மந்திரிகளோ பாரியையோ "वैश्वानरः=ஸாக்ஷாத்தான அக்னியே அதிதியான ப்ராம்ஹணனாக இருந்துகொண்டு பொசுக்குபவன்போல வீட்டில் ப்ரவேசிக்கிறான். அந்த அக்னியி

गृहान्दहन्निव । तस्य दाहं शमयन्त इवाग्नेरेताम्=पाद्यासनादिदानलक्षणां शान्तिं कुर्वन्ति सन्तोऽतिथेर्यतोऽतो हर=आहर हे वैवस्वत उदकं नचिकेतसे पाद्यार्थम् । यतश्चाऽकरणे प्रत्यवायः श्रूयते ॥ ७ ॥

**आशाप्रतीक्षे सङ्गतꣳसूनृतां चेष्टापूर्ते पुत्रपशूꣳश्च सर्वान् ।**
**एतद्वृङ्क्ते पुरुषस्याल्पमेधसो यस्यानश्नन्वसति ब्राह्मणो गृहे ॥**

आशाप्रतीक्षे । अनिर्ज्ञातप्राप्येष्टार्थप्रार्थना आशा । निर्ज्ञातप्राप्यार्थप्रतीक्षणं प्रतीक्षा, ते आशाप्रतीक्षे । सङ्गतम्=तत्संयोगजं फलम्, सूनृतां च=सूनृता हि प्रिया वाक्, तन्निमित्तं च । इष्टापूर्ते—इष्टम्=यागजम्, पूर्तम्=

---

னுடைய தாஹத்தை=சூட்டை, சமனப்படுத்துகின்றவர்கள் போல பாத்யம் (கால் அலம்பும் ஜலம்) ஆஸனதிதானம் இவைரூபமான இந்தச் சாந்தியை ஸாதுக்கள் அதிதிக்குச் செய்கின்றனர். ஆகவே ஹே வைவஸ்வத! பாத்யத்துக்குவேண்டிய ஜலத்தை நசிகேதஸ்ஸுக்குக் கொண்டுவந்து கொடு. அவ்விதம் செய்யாவிடில் சுருதியில் தோஷமன்றோ கூறப்படுகிறது" என்றனர். (7) (எ-று)

(ப-ரை) **अल्पमेधसः**=அற்பபுத்தியுடையவனை **यस्य पुरुषस्य**= எந்தப் புருஷனுடைய, **गृहे**=வீட்டில் **ब्राह्मणः**=ப்ராம்ஹணன், **अनश्नन्**=ஆஹாரமின்றி **वसति**=வஸிக்கின்றானோ (**तस्य**=அந்த மனிதனுடைய) **आशाप्रतीक्षे=अशा** =பொதுப்படையான விருப்பத்தையும் **प्रतीक्षा**=குறிப்பாய் ஒருபொருளைப் பற்றிய விருப்பத்தையும், **सङ्गतम्**=அவற்றின் சேர்க்கையால் கிடைத்தபலனையும்,அவைநிமித்தமான **सूनृताम्**=ப்ரியமான வார்த்தையையும், **इष्टापूर्ते=इष्ट**=யாகத்தாலுண்டாதும், **पूर्त** =தோட்டம் முதலியன வமைத்தலாலுண்டானதுமான பலனையும், **सर्वान्, पुत्रपशूंश्च**=எல்லாபுத்திரர்களையும் பசுக்களையும், ஆகிய**एतत्**=இவை யாவையும் **वृङ्क्ते**=நாசமாக்குகிறான்.(8) (எ-று)

பாஷ்யம்.—**अशाप्रतीक्षे** = இன்னதெனக் குறிப்பாய் அறியப்படாததும் அடையத்தகுந்ததுமான இஷ்டமான பொருளைப்பற்றிய ப்ரார்த்தனை ஆசையென்றும், இன்னதெனக் குறிப்பிடப்பட்டதும் அடையத்தகுந்ததுமான பொருளை எதிர்பார்த்தல் ப்ரதீக்ஷை என்றும் சொல்லப்படும். அந்த ஆசை, ப்ரதீக்ஷை இவைகளையும், ஸங்கதத்தையும்=அவற்றின் சேர்க்கையாலுண்டான பலனையும், **सूनृताञ्च**=

आरामादिक्रियाजं फलम्। पुत्रपशूंश्च—पुत्रांश्च पशूंश्च सर्वान्=एतत्सर्वं यथोक्तं, वृङ्क्ते=आवर्जयति विनाशयतीत्येतत्। पुरुषस्याल्पमेधसः=अल्पप्रज्ञस्य, यस्यानश्नन्=अभुञ्जानो ब्राह्मणो गृहे वसति। तस्मादनुपेक्षणीयस्सर्वावस्थास्वप्यतिथिरित्यर्थः ॥ ८ ॥

**तिस्रो रात्रीर्यदवात्सीर्गृहे मेऽनश्नन् ब्रह्मन्नतिथिर्नमस्यः ।**
**नमस्तेऽस्तु ब्रह्मन् स्वस्ति मेऽस्तु तस्मात्प्रतित्रीन्वरान्वृणीष्व ॥**

एवमुक्तो मृत्युरुवाच नचिकेतसमुपगम्य पूजापुरस्सरम्। तिस्रो

---

மெய்யான வாக்கே ப்ரியமாகவாவதால் அதன் நிமித்தமான பலனையும், **इष्टापूर्ते=इष्ट=** யாகத்தாலும், **पूर्त=**ஆராமம் (தோட்டம்) முதலிய கிரியையாலுண்டானதுமான பலனையும், **सर्वान्=**எல்லா **पुत्रपशूंश्च=**புத்திரர்களையும் பசுக்களையும் ஆகிய **एतत=**இதுவரை சொல்லப்பட்டவை யாவையும் **वृङ्क्ते=**வசமாக்குகிறான் = அதாவது:—நாசமாக்குகிறான் என்பது பொருள். **अल्पमेधसः यस्यपुरुषस्य=**அற்பமறிந்தவனான எந்தப் புருஷனுடைய வீட்டில் ப்ராம்ஹணன் சாப்பிடாதவனாய் வஸிக்கின்றானோ? ஆகவே, எந்த நிலைகளிலும் கூட அதிதியானவன் உபேக்ஷிக்கத்தக்கவனன்று என்பது பொருள். (8) (எ—று)

(ப—ரை) **ब्रह्मन्! =** ஹே ப்ராம்ஹணா! **नमस्यः:=** நமஸ்காரஞ் செய்ய அர்ஹரும், **अतिथिः=** அதிதியுமாக இருந்துகொண்டு **तिस्रः=** மூன்று **रात्रीः=**இரவுகள் முழுதும், **अनश्नन्=** ஆஹாரஞ்செய்யாதவராக **मे=**என்னுடைய **गृहे=**வீட்டில் **यत्=**யாதுகாரணத்தால் **अवात्सीः=** வஸித்தீரோ, (**तस्मात्=**அக்காரணத்தினால்) **ते=**உமக்கு **नमः=**நமஸ்காரமானது **अस्तु=**இருக்கட்டும். **हे ब्रह्मन्=**ஓய் ப்ராம்ஹணா! **तस्मात्=**நீர் சாப்பிடாமல் எனதுவீட்டில் வாஸஞ்செய்ததாலுண்டான தோஷநிவிருத்திவாயிலாக **मे=**எனக்கு **स्वस्ति=**க்ஷேமமானது, **अस्तु=** உண்டாகட்டும். **प्रति=**ஆஹாரமின்றிவஸித்த ஒவ்வொருராத்திரிக்கும் பதிலாக **त्रीन्=**மூன்று, **वरान्=**வரன்களை, **वृणीष्व=**கேட்டுக் கொள்ளும். (9) (எ—று)

பாஷ்யம்—இவ்விதம் பாரியைகளினாலோ, மந்திரிகளினாலோ சொல்லப்பட மிருத்யு (யமன்) நசிகேதஸ்ஸினுடைய ஸமீபம்

रात्रीः, यत्=यस्मात्, अवात्सीः=उषितवानसि गृहे मे=मम । अनश्नन्, हे ब्रह्मन्! अतिथिस्सन्नमस्यः=नमस्कारार्हश्च । तस्मान्नमस्ते=तुभ्यम्, अस्तु=भवतु । हे ब्रह्मन् स्वस्ति=भद्रं मेऽस्तु । तस्माद्भवतोऽनशनेन मद्गृहवासनिमित्ताद्दोषात्तत्प्राप्त्युपशमेन । यद्यपि भवदनुग्रहेण सर्वं मम स्वस्ति स्यात्तथापि त्वदधिकसंप्रसादनार्थमनशनेनोपोषितामेकैकां रात्रिं प्रति त्रीन्वरान्वृणीष्व=अभिप्रेतार्थविशेषान्प्रार्थयस्व मत्तः॥ ९ ॥

**शान्तसङ्कल्पः सुमना यथास्याद्वीतमन्युर्गौतमो माभि मृत्यो।**
**त्वत्प्रसृष्टं माभिवदेत्प्रतीत एतत्त्रयाणां प्रथमं वरं वृणे॥१०॥**

---

வந்து பூஜையை முன்னிட்டுச் சொல்லத் தொடங்கினர். ஹே ப்ரம்ஹன்! யாதுகாரணத்தினல் அதிதியாகவும், நமஸ்காரார்ஹராகவுமிருந்துகொண்டு சாப்பிடாதவராய் மூன்று இரவுகள் முழுதும் எனது வீட்டில் வஸித்தீரோ அக்காரணம்பற்றி உம்மையும் பொருட்டு நமஸ்காரமானது இருக்கட்டும். ஹே ப்ரம்ஹன்! நீர் ஆஹாரஞ்செய்யாமல் எனது வீட்டில் வாஸஞ்செய்த காரணமாயேற்பட்ட தோஷநிவிருத்திவாயிலாக எனக்கு க்ஷேமமானது உண்டாகட்டும். உமது அனுக்கிரஹத்தினல் எனக்கு ஸர்வக்ஷேமமுமுண்டாகுந்தான். ஆயினும் உம்மை அதிகம் ப்ரார்த்திக்கவேண்டி ஆஹாரமின்றி உபவாஸமிருக்கப்பட்ட ஒவ்வொரு இரவுக்கும் பதிலாக மூன்றுவரன்களை (அபிப்ரேதமான=இஷ்டப்பட்ட, அர்த்த விசேஷங்களை) என்னிடமிருந்து வேண்டிக்கொள்ளும். (9) (எ—று)

(ப—ரை) **हे मृत्यो!**=ஓய் யமனே! **गौतमः**=எனது பிதாவானவர் **शान्तसङ्कल्पः**=யமனிடம் சென்று நமது புத்திரன் என்ன செய்யப்போகின்றனே? என்ற கவலையற்றவராகவும், **सुमनाः**=தெளிந்த மனதுள்ளவராகவும், **वीतमन्युः**=கோபமற்றவராகவும் **यथा स्यात्**=எவ்விதமாவாரோ, **त्वत्प्रसृष्टम्**=உம்மால் வீட்டை நோக்கி அனுப்பப்பட்ட **मा**=என்னைக்குறித்து **प्रतीतः**=அதே எனது புத்திரந்தான் இவன் என்ற நினைவையடைந்தவராய்க் கொண்டு **अभिवदेत्**=பேசுவாரோ **एतत्**=இந்தப் பிரயோஜனத்தை **त्रयाणाम्**=மூன்றுவரன்களுக்குள் **प्रथमं वरम्**=முதலாவது வரனுக **वृणे**=ப்ரார்த்திக்கிறேன். (10)

नचिकेतास्त्वाह—यदि दित्सुर्वरान्, शान्तसङ्कल्पः=उपशान्तः सङ्कल्पो यस्य मां प्रति यमं प्राप्य किन्नु करिष्यति मम पुत्र इति स शान्तसङ्कल्पः, सुमनाः=प्रसन्नमनाश्च यथा स्यात्, वीतमन्युः=विगतरोषश्च गौतमो मम पिता, माऽभि=मांप्रति हेमृत्यो!, किञ्च त्वत्प्रसृष्टम्=त्वया विनिर्मुक्तं प्रेषितं गृहं प्रति मा=माम्, अभिवदेत्प्रतीतः=लब्धस्मृतिः 'स एवायं पुत्रो ममागतः' इत्येवं प्रत्यभिजानन्नित्यर्थः। एतत्प्रयोजनं त्रयाणां वराणां प्रथममाद्यं वरं वृणे=प्रार्थयेयं यत्पितुः परितोषणम् ॥ १० ॥

**यथा पुरस्ताद्भविता प्रतीत औद्दालकिरारुणिर्मत्प्रसृष्टः। सुखꣳ रात्रीश्शयिता वीतमन्युस्त्वां ददृशिवान्मृत्युमुखात्प्रमुक्तम्॥**

---

பாஷ்யம்.—நசிகேதஸ் சொல்லலுற்றான்—ஓய் மிருத்யுவே! நீர் வரன்களைக் கொடுக்கவிருப்புள்ளீராயின் **शान्तसङ्कल्पः**=என்னைக் குறித்து உபசாந்தமான ஸங்கல்பத்தை=எனது புத்திரன் யமனை யடைந்து என்னசெய்யப்போகிறானோ என்ற கவலையை, யுடையவராகவும், தெளிந்த மனதுள்ளவராகவும், ரோஷமற்றவராகவும் எனது பிதாவான கௌதமர் என்னைக்குறித்து எவ்விதமாவாரோ, மேலும், **त्वत्प्रसृष्टम्**=உம்மால் வீட்டைக்குறித்து அனுப்பப்பட்ட என்னை **प्रतीतः**=நினைவில் வைத்துக்கொண்டவராக அதாவது:—அதே எனது புத்திரன்தான் திரும்பவும் வந்திருக்கிறான் என்ற எண்ணத்தையடைந்தவராய்க் கொண்டு என்று பொருள். பிதாவைச் சந்தோஷப்படுத்தல் என்பது யாதுண்டோ **एतत्**=இந்த ப்ரயோஜனத்தை மூன்று வரன்களுக்குள் முதலாவது வரனாக ப்ரார்த்திக்கிறேன். (10) (எ—று)

(அ—கை) இந்தமந்திரத்தினால் மிருத்யுவினால் கொடுக்கப்பட்ட வரன் சொல்லப்படுகிறது—

(ப—ரை) **पुरस्तात्** = மிருத்யுலோகம் வருவதற்குமுந்தி **आरुणिः**=அருணர் என்பவரின் புத்திரரான * **औद्दालकिः**=உத்தாலகர்

---

* उद्दालकएव औद्दालकिः=உத்தாலகர் என்பவரே ஔத்தாலகி என்றதாலும் சொல்லப்படுவர் என்றும், औद्दालकिः=என்பவர் இருமஹாபுருஷர்களின் புத்திரராவார். அதாவது: அருணருக்கு உத்தாலகர் என்பவர் பெண்ணைக் கொடுக்கும்பொழுது தனது பெண்ணின் வயிற்றிற்

मृत्युरुवाच । यथा बुद्धिस्त्वयि पुरस्तात्=पूर्वमासीत्स्नेहसमन्विता पितुस्तव, भविता प्रीतिसमन्वितस्तव पिता तथैव प्रतीतः=प्रतीतवान्सन् । औद्दालकिः=उद्दालक एवौद्दालकिः,अरुणस्यापत्यमारुणिः, द्व्यामुष्यायणो वा, मत्प्रसृष्टः=मया अनुज्ञातस्सन्नितरा अपि रात्रीः सुखम्=प्रसन्नमनाः,

---

என்ற உனது பிதாவானவர், यथा=எவ்விதம் உன்னிடம் சினேஹ முள்ளவராக இருந்தாரோ, அவ்விதமே சினேமுள்ளவராய்க் கொண்டும், प्रतीतः='அதே புத்திரன் தான் இவன்' என்ற அறிவையடைந்தவராய்க் கொண்டும், मत्प्रसृष्टः=என்னால் அனுக்கிரஹிக்கப்பட்ட வராய்க் கொண்டும் रात्रीः=மற்றுமுள்ள இரவுகளில் सुखम्=கவலை யற்றிருக்கும்படி शयिता=படுத்துறங்குகின்றவராகவும், ஆகி मृत्यु-मुखात्=யமனின் வாயிலிருந்து प्रमुक्तम्=விடுபட்ட (அதாவது: மிருத்யு லோகத்தினின்றும் திரும்பிவந்த என்றும்) त्वाम्=உன்னை ददृशि-वान्=கண்ணால் பார்த்து वीतमन्युः=கோபமற்றவராகவும் भविता= ஆகப்போகிறார். (11) (எ—று)

பாஷ்யம்.—மிருத்யுசொல்லலுற்றார்—உனது பிதாவினுடைய புத்தியானது உன்னிடத்தில் पुरस्तात्=முன்னர் ஸ்னேஹத்துடன் கூடினதாக எவ்விதமிருந்ததோ அவ்விதமே औद्दालकिः=ஔத்தாலகியும் அதாவது: உத்தாலகரேதான் ஔத்தலகி எனப்படுவர் என்ற படி ஔத்தாலகரும் அருணருடைய அபத்யமாக(புத்திரனாக)இருப்பதுபற்றி ஆருணி என்று கூறப்படுபவரும், அல்லது அருணருடைய ஔரஸபுத்திரனும் பிறப்பதற்குமுன் உத்தாலகரால் தனக்கும் புத்திரனாக எண்ணப்பட்டவருமான உனது பிதா ப்ரீதியுடன் கூடினவராகவும், அதேபுத்திரன்தான் இவன் என்ற அறிவையடைந்தவராகவும், என்னால் அனுக்கிரஹிக்கப் பட்டவராய்க் கொண்டு (நீ இங்குவந்தபிறகுள்ள) மற்ற இரவுகளிலும் सुखम्=தெளிந்த மன

---

பிறக்கும்பிள்ளை நம்மிருவருக்கும் பிள்ளையாகவாகவேண்டும் என்ற ஒப்பந்தத்துடன் கொடுத்தார். ஆதலால் அருணரின் புத்திரரான ஆருணியானவர், அருணருடைய புத்திரராகவும் உத்தாலகருடைய புத்திரராகவும் ஆகிவிடுகிறார். ஆனதுபற்றி द्व्यामुष्यायणராக=ஒரு ஒப்பந்தத்தை முன்னிட்டு இருவரின் புத்திரராகவாகிறார் என்றும் பாஷ்யத்தில் ஔத்தாலகி என்ற பதத்துக்கு இரண்டு பொருள் சொல்லப்பட்டிருக்கிறது.

शयिता=स्वप्ता वीतमन्युः=विगतमन्युश्च भविता स्यात्, त्वां=पुत्रं ददृशिवान् दृष्टवान्स मृत्युमुखात्=मृत्युगोचरात्प्रमुक्तं सन्तम् ॥ ११ ॥

**स्वर्गे लोके न भयं किञ्चनास्ति न तत्र त्वं न जरया बिभेति। उभे तीर्त्वा अशनाया पिपासे शोकातिगो मोदते स्वर्गलोके॥**

नचिकेता उवाच—स्वर्गे लोके रोगादिनिमित्तं भयं किञ्चन किञ्चिदपि नास्ति। नच तत्र त्वं मृत्यो सहसा प्रभवसि। अतो जरया युक्त इहलोक वत्त्वत्तो न बिभेति कश्चित्तत्र। किञ्च, उभे अशनाया पिपासे तीर्त्वा=अतिक्रम्य, शोकमतीत्य गच्छतीति शोकातिगः सन्मानसेन दुःखेन वर्जितो मोदते=हृष्यति, स्वर्गलोके=दिव्ये ॥ १२ ॥

---

முள்ளவராக शयिता=படுத்துறங்குபவராகவும், மிருத்யுவின் உலகிலிருந்து திரும்பிவந்தவனுன உன்னைக்கண்டு கோபமற்றவராகவும் ஆகப்போகிருர் என்ருர். (11) (எ—று)

(அ—கை) நசிகேதஸ் சொல்லுகிருன்—

(ப—ரை) **स्वर्गे लोके**=ஸ்வர்க்கலோகத்தில், **भयम्**=ரோகாதிநிமித்தமான பயமானது **किञ्चन**=அற்பமும் **नास्ति**=கிடையாது. **तत्र**=அந்த ஸ்வர்க்கலோகத்தில் **त्वम्**=யமனுன நீர் **न (सहसा प्रभवसि)**=விரைவாகவருவதில்லை. ஆதலால் அங்குள்ள ஒருவனும் **जरया**=மூப்பினுல் **न बिभेति**=உம்மிடமிருந்து பயத்தையடைவதில்லை. ஆகவே **स्वर्गलोके**=ஸ்வர்க்கலோகத்திலுள்ளவன் **अशनायापिपासे**=பசிதாஹம் என்ற **उभे**=இரண்டையும் **तीर्त्वा**=தாண்டி **शोकातिगः**=சோகத்தைக் கடந்தவனுய்க் கொண்டு **मोदते**=ஸந்தோஷிக்கிருன். (12)

பாஷ்யம்.—நசிகேதஸ் சொல்லலுற்ருன்—ஸ்வர்க்கலோகத்தில் ரோகாதிநிமித்தமான பயமானது **किञ्चन**=அற்பமும் கிடையாது. ஹேம்ருத்யோ! நீரும் அவ்விடத்தில் சீக்கிரமாக ப்ரவிருத்திப்பதில்லை. ஆனதுபற்றி இவ்வுலகில் போல அவ்வுலகில் ஒருவனும் ஜரையுடன் (மூப்புடன்) கூடினவனுய் உம்மிடமிருந்து பயத்தையடைவதில்லை. மேலும், பசிதாஹங்களென்ற இரண்டையும் தாண்டி **शोकातिगः**=சோகத்தை யதிக்கிரமித்துச் சொல்லுகிருன் என்பதுபற்றி சோகாதிகனுகவிருந்து கொண்டு அதாவது: மானஸ

स त्वमग्निँ स्वर्ग्यमध्येषि मृत्यो प्रब्रूहि त्वँ श्रद्दधानाय मह्यम् ।
स्वर्गलोका अमृतत्वं भजन्त एतद्द्वितीयेन वृणे वरेण ॥१३॥

एवंगुणविशिष्टस्य स्वर्गलोकस्य प्राप्तिसाधनभूतमग्निं स त्वम्=मृत्युः, अध्येषि=स्मरसि जानासीत्यर्थः हे मृत्यो यतः। तं प्रब्रूहि कथय श्रद्दधानाय=श्रद्धावते मह्यं स्वर्गार्थिने। येनाग्निना चितेन स्वर्गलोकाः=स्वर्गो लोको येषां ते स्वर्गलोकाः यजमानाः अमृतत्वम्=अमरणतां देवत्वं भजन्ते=प्राप्नुवन्ति तदेतदग्निविज्ञानं द्वितीयेन वरेण वृणे ॥ १३ ॥

---

மான துக்கமற்றவனுய்க் கொண்டு स्वर्गलोके मोदते=ஸ்வர்க்கலோகத்தில் ஸந்தோஷிக்கிருன். (12) (எ—று)

(ப—ரை) मृत्यो !=ஹேம்ருத்யோ! स त्वम्=அந்த நீர். स्वर्ग्यम्=ஸ்வர்க்கலோக ப்ராப்த்திஸாதனமான अग्निम्=அக்னியை अध्येषि (यतः)=யாதுகாரணத்தினுல் அறிகின்றீரோ, அக்காரணத்தினுல் तम्=அந்த அக்னியை श्रद्दधानाय=ஸ்வர்க்கத்திலாவல் கொண்ட मह्यम्=என்னையும் பொருட்டு प्रब्रूहि=சொல்லக்கடவீர். स्वर्गलोकाः=ஸ்வர்க்கலோகத்தை யடைந்த யஜமானர்கள் अमृतत्वम्=மரணமற்றிருத்தலை அதாவது: தேவபாவத்தை भजन्ते=அடைகின்றனர். ஆகவே एतत्=இந்த அக்னிவிக்ஞானத்தை (உபாஸனத்தை) द्वितीयेन=இரண்டாவதான वरेण=வரத்தினுல் वृणे=வேண்டுகிறேன். (13)

பாஷ்யம் —ஹேம்ருத்யோ! மிருத்யுவான அந்த நீர் இம்மாதிரியான குணத்துடன் கூடின ஸ்வர்க்கலோகத்தின் ப்ராப்த்திக்கு ஸாதனபூதமான அக்னியை யாதுகாரணத்தினுல் ஸ்மரிக்கின்றீரோ அதாவது: அறிகின்றீரோ, அக்காரணத்தினுல் श्रद्दधानाय=ஶ்ரத்தையுள்ளவனுன அதாவது: ஸ்வர்க்கார்த்தியான என்னையும் பொருட்டு சொல்லும். [चितेन=உபாஸிக்கப்பட்ட எந்த அக்னியினுல்] स्वर्गलोकाः=எவர்களுக்கு ஸ்வர்க்கம் லோகமோ அந்த யஜமானர்கள் ஸ்வர்க்க லோகர்களெனப்படுவர். अमृतत्वम् = மரணமற்றிருத்தலை அதாவது: தேவத்தன்மையை भजन्ते=அடைகின்றனர். एतत्=இந்த அக்னிவிக்ஞானத்தை இரண்டாவதுவரத்தினுல் ப்ரார்த்திக்கிறேன்.

(அ—கை) ம்ருத்யுவின் ப்ரதிக்ஞை பின்வருமாறு—

**प्रते ब्रवीमि तदु मे निबोध स्वर्ग्यमग्निं नचिकेतः प्रजानन् ।**
**अनन्तलोकाप्तिमथो प्रतिष्ठां विद्धि त्वमेतं निहितं गुहायाम् ॥**

मृत्योः प्रतिज्ञेयम् । प्र ते=तुभ्यं प्रब्रवीमि यत्त्वया प्रार्थितं तदु मे=मम वचसो निबोध=बुध्यस्वैकाग्रमनास्सन्, स्वर्ग्यम्=स्वर्गाय हितं स्वर्गसाधन मग्निं हे नचिकेतः प्रजानन्विज्ञातवानहं सन्नित्यर्थः। प्रब्रवीमि तन्निबोधेति च शिष्यबुद्धिसमाधानार्थं वचनम् । अधुनाग्निं स्तौति । अनन्तलोकाप्तिम्= स्वर्गलोकफलप्राप्तिसाधनमित्येतत् । अथो=अपि, प्रतिष्ठाम्=आश्रयं जगतो विराड्रूपेण तमेतमग्निं मयोच्यमानं विद्धि=जानीहि त्वं निहितं=स्थितं, गुहायाम्=विदुषां बुद्धौ निविष्टमित्यर्थः॥ १४ ॥

---

(ப-ரை) **नचिकेतः!**=ஹே நசிகேதஸ்ஸே! **तत्, उ**=எது உன்னால் ப்ரார்த்திக்கப்பட்டதோ அதை **प्रजानन्**=அறிந்தவனான நான் **ते**=உனக்கு **प्रब्रवीमि**=சொல்லுறேன். **स्वर्ग्यम्**=ஸ்வர்க்கஸாதனமான **अग्निम्**=அக்னியை **निबोध**=ஒரேயிடத்தில் நிறுத்தின மனமுள்ளவனாய் அறிந்து கொள்ளுவாயாக. **त्वम्**=நீ, **एतम्**=இந்த அக்னியை, **अनन्तलोकाप्तिम्**=முடிவற்ற ஸ்வர்க்கலோகபலப்ராப்த்திக்கு ஸாதனமென்றும், **प्रतिष्ठामथो**=விராட்ரூபத்தினால் ஜகத்துக்கு ஆஶ்ரயமென்றும், **गुहायाम्**=உபாஸகர்களின் ஹிருதயகுஹையில் **निहितम्**=இருப்பதாகவும் **विद्धि**=அறிந்துகொள்ளு. (14) (எ-று)

பாஷ்யம் — இது ம்ருத்யுவின் ப்ரதிக்ஞையாகும். உன்னையும் பொருட்டுச் சொல்லுகிறேன். எது உன்னால் ப்ரார்த்திக்கப்பட்டதோ அதை என்னுடைய வார்த்தையினால் ஏகாக்ரமான மனத்தையுடையவனாய்க்கொண்டு அறிந்துகொள்ளு. **स्वर्ग्यम्**=ஸ்வர்க்கத்தையும் பொருட்டு ஹிதமான அதாவது:—ஸ்வர்க்கஸாதனமான அக்னியை ஹே நசிகேஸ்ஸே! **प्रजानन्**=நானறிந்தவனாக விருந்துகொண்டு என்று பொருள். "சொல்லுகிறேன் அதையறிந்து கொள்" என்ற வசனமானது சிஷ்யனுடைய புத்தியை ஒருமுகப்படுத்தவேண்டியாம். இப்பொழுது அக்னியை ஸ்துதிக்கிறார்—**अनन्तलोकाप्तिम्**= ஸ்வர்க்கலோகபலப்பிராப்த்திக்கு ஸாதனமானது என்பதுபொருள். **अथो**=மேலும், **प्रतिष्ठाम्**=அக்னிவாயு ஆதித்யன் என்ற மூன்றுவுருவமுள்ள விராட்ரூபத்தினால் ஜகத்துக்கு ஆஶ்ரயமாகவானது என்பது

लोकादिमग्निं तमुवाच तस्मै या इष्टका यावतीर्वा यथावा ।
स चापि तत्प्रत्यवदद्यथोक्तमथास्य मृत्युः पुनरेवाह तुष्टः॥१५॥

इदं तु श्रुतेर्वचनम् । लोकादिम्=लोकानामादिं प्रथमशरीरित्वादग्निं, तम्=प्रकृतं नचिकेतसा प्रार्थितम्, उवाच=उक्तवान्मृत्युः तस्मै=नचिकेतसे। किञ्च या इष्टकाश्चेतव्याः स्वरूपेण, यावतीर्वा संख्यया, यथा वा चीयतेऽग्निर्येन प्रकारेण सर्वमेतदुक्तवानित्यर्थः। सचापि=नचिकेताः, तत्=मृत्यु-

---

பொருள். என்னால் சொல்லப்படும் அந்த இந்த அக்னியை நீ அறிந்துகொள். निहितं गुहायाम्=வித்வான் (உபாஸகர்) களுடைய புத்தியிலிருப்பது என்பது பொருள். (14) (எ—று)

(அ—கை) இந்த மந்திரம் சுருதியின் வசனமாகும்—

(ப—ரை) लोकादिम्=முதன்முதலில் சரீரியாகவாவதுபற்றி லோகங்களுக்கு ஆதியானதும் तम्=அந்த நசிகேதஸ்ஸினால் கேட்கப்பட்டதுமான अग्निम्=அக்னியை या इष्टकाः=ஸ்வரூபமாக அடுக்க வேண்டிய கற்கள் எவைகளுண்டோ அவைகளுடனும், यावतीर्वा= கற்களின் எண்கள் எவ்வளவோ அவ்வளவுடனும், यथा वा=அந்தந்தகற்களை ப்ரகாசப்படுத்துகின்ற அந்தந்தமந்த்ரோச்சாரணத்துடன் கூட அவை எவ்விதம் அடுக்கப்படுமோ அவற்றுடனும் तस्मै=அந்த நசிகேதஸ்ஸுக்கு उवाच=யமன் உபதேசித்தார். सचापि=அந்த நசிகேதஸ்ஸும்,तत्=மிருத்யுவினால்சொல்லப்பட்டதை यथोक्तम्=சொல்லப்பட்டபடி प्रत्यवदत्=திருப்பிச் சொன்னான். अथ=பிறகு तस्य= அந்த நசிகேதஸ்ஸினுடைய பதில் வசனத்தினால் तुष्टः=ஸந்தோஷத்தையடைந்த मृत्युः=யமன் पुनरेव=மறுபடியுமே आह=சொன்னார்.

பாஷ்யம்.—இது சுருதியின் வசனமாகும். लोकादिम्=முதலிலுண்டான சரீரியாகவிருப்பதுபற்றி லோகங்களுக்கு ஆதியானதும் நசிகேதஸ்ஸினால் ப்ரார்த்திக்கப்பட்டதும் ப்ரகிருதமுமான அக்னியை அந்த நசிகேதஸ்ஸுக்கு மிருத்யுவானவர் சொன்னார். மேலும், அடுக்கவேண்டிய கற்கள் ஸ்வரூபத்தினால் எவைகளுண்டோ*, எண்ணினால் அக்கற்கள் எத்துணையுண்டோ, மந்திரங்களைச் சொல்லிக்கொண்டு எந்தப்ரகாரமாக அக்னிக்கு ஆதாரமானஸ்தல

---

* அடுக்கவேண்டிய கற்களின் ஸ்வரூபம் எவைகளுண்டோ என்பது கருத்து.

नोक्तं यथावत् प्रत्ययेनावदत्=प्रत्युच्चारितवान्। अथ तस्य प्रत्युच्चारणेन तुष्टस्सन् मृत्युः पुनरेवाह—वरत्रयव्यतिरेकेणान्यं वरं दित्सुः॥ १५॥

**तमब्रवीत्प्रीयमाणो महात्मा वरं तवेहाद्य ददामि भूयः।**
**तवैव नाम्ना भवितायमग्निः सृङ्कां चेमामनेकरूपां गृहाण॥**

कथम्, तं नचिकेतसमब्रवीत्प्रीयमाणः=शिष्ययोग्यतां पश्यन्प्रीयमाणः प्रीतिमनुभवन्, महात्मा=अक्षुद्रबुद्धिः, वरं तव चतुर्थम्, इह=प்रीतिनिमित्तम्, अद्य=इदानीम्, ददामि भूयः=पुनः प्रयच्छामि। तवैव=

---

மானது கற்களால் அடுக்கப்படுகின்றதோ இவையாவையும் சொன்னார். அந்த நசிகேதஸ்ஸூம் மிருத்யுவினல் சொல்லப்பட்ட அதை உள்ளபடிக் கான அறிவுடன் திருப்பி உச்சரித்தான். பிறகு அவனுடைய ப்ரத்யுச்சாரணத்தினல் மிருத்யு ஸந்துஷ்டராகவிருந்துகொண்டு மூன்றுவரன்களை விடவேருக அன்னியமான வரனைக் கொடுக்கவெண்ணங் கொண்டவராய்த் திரும்பவுமே சொல்லத் தொடங்கினர். (15) (எ—று)

(ப—ரை) महात्मा=பெரியபுத்தியையுடையவரான யமன் प्रीयमाणः=ப்ரீதியையனுபவித்துக் கொண்டு तव=உனக்கு वरम्=ப்ரீதி நிமித்தமான நான்காவதுவரனை इह=இப்பொழுது भूयः=திரும்பவும் ददामि=தருகிறேன் என तम्=அந்த நசிகேதஸ்ஸைப்பார்த்து अब्रवीत्=சொன்னர். अयम्=என்று சொல்லப்படுகின்ற अग्निः=அக்னியானது तव=உன்னுடைய नाम्नैव=பெயரினலேயே भविता=ப்ரஸித்தமாகவாகப்போகிறது. மேலும், सृङ्काम्=ரத்தினங்களுள்ளதும் अनेकरूपाम्=விசித்திரமானதுமான इमाम्=இந்த மாலையை गृहाण=பெற்றுக்கொள்ளு. அல்லது अनेकरूपाम्=பலவிதமான ஸ்வரூபமுள்ள इमाम्=இந்த सृङ्काम्=குத்ஸிதமாக=வெறுக்கத்தக்கதாக இல்லாத கதியை=அதாவது: பலனை गृहाण=பெற்றுக்கொள்ளு. (16) (எ-று)

பாஷ்யம்.—எவ்விதமெனின்? சொல்லப்படுகிறது. சிஷ்யனுடைய யோக்யதையைக் கண்டு प्रीयमाणः=ப்ரீதியை யனுபவித்தவரும், महात्मा=அற்பபுத்தியற்றவருமான யமன் நான்காவதான வரனை உனக்கு (எனக்குண்டான) ப்ரீதிநிமித்தமாக இப்பொழுது திரும்பவும் தருகிறேன் என அந்த நசிகேதஸ்ஸைப் பார்த்துச்

नचिकेतसो नाम्ना=अभिधानेन प्रसिद्धो भविता मयोच्यमानोऽयमग्निः। किञ्च, सृङ्काम्=शब्दवतीं रत्नमयीं मालामिमामनेकरूपां विचित्रां गृहाण स्वीकुरु। यद्वा सृङ्काम्=अकुत्सितां गतिं कर्ममयीं गृहाण अन्यदपि कर्मविज्ञानमनेकफलहेतुत्वात्स्वीकुर्वित्यर्थः॥ १६ ॥

पुनरपि कर्मस्तुतिमेवाह—

**त्रिणाचिकेतस्त्रिभिरेत्य सन्धिं त्रिकर्मकृत्तरति जन्ममृत्यू।**
**ब्रह्मजज्ञं देवमीड्यं विदित्वा निचाय्येमाꣳशान्तिमत्यन्तमेति॥**

---

சொன்னார். **तवैव**=நசிகேதஸ்ஸான உன்னுடைய பெயரினுலேயே ப்ரஸித்தமாக என்னுற் சொல்லப்படும் அக்னி ஆகப்போகிறது. மேலும், **अनेकरूपाम्**=விசித்திரமானதும் **सृङ्काम्**=சப்திக்கின்றதும், ரத்தினங்களுள்ளதுமான இந்தமாலையைப் பெற்றுக்கொள்ளு. அல்லது **सृङ्काम्**=வெறுக்கத்தகாத கர்மமயமான கதியை=பலனை பெற்றுக்கொள்ளு. அதாவது:—அனேக பலன்களுக்கு ஹேதுவாக இருப்பதுபற்றி வேறுனகர்மவிக்ஞானத்தையும் பெற்றுக்கொள்ளு என்பது பொருள் என்றும். (16) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—திரும்பவும் கர்மத்தைப் பற்றின ஸ்துதியையே சொல்லுகிறுர்—

(ப—ரை) **त्रिणाचिकेतः**=மூன்றுதடவை எவனுல் நாசிகேதமென்ற அக்னிசயனம் செய்யப்பட்டதோ அவன் த்ரிணுசிகேதனுவான். அவன் **त्रिभिः**=மாதா, பிதா, ஆசிரியன் இவர்களுடன் அல்லது சுருதி, ஸ்மிருதி, சிஷ்டர் இவர்களுடன், அல்லது ப்ரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் இவற்றுடன் **संधिम्**=ஸம்பந்தத்தை=மாதா முதலியோரின் உபதேசத்தை **एत्य**=உள்ளபடி அடைந்து **त्रिकर्मकृत्**=யாகம் அத்யயனம் தானம் இவற்றைச் செய்வானுயின் **जन्ममृत्यू**=ஜனனமரணங்களை **तरति**=கடக்கிறுன். **ब्रह्मजज्ञम्**=ப்ரம்ஹத்தினிட மிருந்துண்டானவனும் ஸர்வக்ஞனும் **ईड्यम्**=ஸ்துதிக்கத்தகுந்தவனுமான **देवम्**=நாசிகேதாக்னிசயனரூபனுன ஸ்யம் ப்ரகாச விராட்புருஷனை **विदित्वा**=சாஸ்திரமூலமறிந்து **निचाय्य**=ஆத்மபாவனையாலனுபவித்து (நானே அவன் என அனுபவித்து) **इमाम्**=

त्रिणाचिकेतः, त्रिःकृत्वो नाचिकेतोऽग्निश्चितो येन स त्रिणाचिकेतः तद्विज्ञानः, तदध्ययनः, तदनुष्ठानवान्वा। त्रिभिः=मातृपित्राचार्यैः, एत्य=प्राप्य सन्धिं=सन्धानं संबन्धं मात्राद्यनुशासनं यथावत्प्राप्येत्येतत्। तद्धि प्रामाण्यकारणं श्रुत्यन्तरादवगम्यते। यथा "मातृमान् पितृमान्" इत्यादेः। वेदस्मृतिशिष्टैर्वा, प्रत्यक्षानुमानागमैर्वा। तेभ्यो हि विशिष्टबुद्धिः प्रत्यक्षा। त्रिकर्मकृत्=इज्याध्ययनदानानां कर्ता, तरति=अतिक्रामति जन्ममृत्यू।

---

தனது உபாஸனையில் ப்ரத்யக்ஷமான **शान्तिम्**=உபரதியை அதாவது: விராட்ரூபத்தை **अत्यन्तम्**=அதிசயிக்கத்தக்கதாக **एति**=அடைகிறான்.

பாஷ்யம்.—**त्रिणाचिकेतः**=மூன்றுதடவை நாசிகேத மென்ற அக்னியானது எவனால் சயனஞ்செய்யப்பட்டதோ அவன் த்ரிணாசிகேதனாவான். அல்லது எவனால் நாசிகேதமெனப்பெயரிய அக்னி விஷயமான வேதமானது மூன்றுதடவை அத்யயனஞ்செய்யப்பட்டதோ அவனாவது, நாசிகேதமென்ற அக்னியை=அக்னியாதார ஸ்தலத்தை, யமைத்து அதில் முறைப்படி மூன்றுதடவை அந்தக் கர்மமானது எவனால் அனுஷ்டிக்கப்பட்டதோ அவனாவது, அல்லது எவனால் நாசிகேதாக்னிசயன ஸம்பந்தமான உபாஸனமானது மூன்றுதடவை செய்யப்பட்டதோ அவனாவது த்ரிணாசிகேத: என்றதால் சொல்லப்படுவான். ஆகவே அந்த த்ரிணாசிகேதனானவன் மாதா பிதா ஆசிரியர் இவர்களுடன் ஸந்தியை=ஸந்தானத்தை அதாவது: ஸம்பந்தத்தை அதாவது: மாதா முதலியோரின் சிக்ஷணத்தை உள்ளபடி அடைந்து என்றும். மாதா முதலியோரின் சிக்ஷணமானது ப்ராமாண்யத்துக்குக் காரணமென வேறுஸ்ருதிமூலமறியக்கிடக்கின்றதன்றோ? **"यथा मातृमान् पितृमान्"** சிறந்தமாதாவை யடைந்தவனும் சிறந்த பிதாவையடைந்தவனும் (சிறந்த ஆசாரியனை யடைந்தவனும் எவ்விதம் சொல்லுவானோ. அவ்விதமே ஜைமினி என்ற மஹாருஷிசொன்னார் என்றதாதியால்) ப்ருஹதாரண்யகத்தில் சொல்லவும்பட்டிருக்கிறது. அல்லது **त्रिभिः** என்றதற்கு வேதம், ஸ்மிருதி, சிஷ்டர் இவர்களுடைய உபதேசத்தை முறைப்படி அடைந்து என்றாவது, அல்லது ப்ரத்யக்ஷம் அனுமானம், ஆகமம் (சாஸ்திரம்) இவற்றினுபதேசத்தை உள்ளபடி அடைந்து என்றாவது பொருள் கொள்ளலாம். அவற்றினின்று மேற்படும் விசுத்தியானது

किञ्च=ब्रह्मजज्ञम्=ब्रह्मणो हिरण्यगर्भाज्जातो ब्रह्मजः, ब्रह्मजश्चासौ ज्ञश्चेति ब्रह्मजज्ञः, सर्वज्ञो ह्यसौ। तं देवम्=द्योतनात् ज्ञानादिगुणवन्तम्, ईड्यम्=स्तुत्यं विदित्वा शास्त्रतो निचाय्य= दृष्ट्वा चात्मभावेन, इमाम्=स्वबुद्धिप्रत्यक्षाम्=शान्तिम्=उपरतिम्, अत्यन्तमेति=अतिशयेनेति। वैराजं पदं ज्ञानकर्मसमुच्चयानुष्ठानेन प्राप्नोतीत्यर्थः॥ १७ ॥

इदानीमग्निविज्ञानचयनफलमुपसंहरति प्रकरणं च—

---

கண்கூடாகவன்றோ இருக்கின்றது. **त्रिकर्मकृत्**=யாகம் அத்யயனம் தானம் இவற்றைச் செய்பவன் பிறப்பிறப்புகளைக் கடக்கிறான். மேலும், **ब्रह्मजज्ञम्**=ப்ரப்ஹாவினிட (ஹிரண்யகர்ப்பரிட) மிருந்து உண்டானவனும், ஸர்வச்ஞனுமான இவன் (நாசிகேதாக்னிசயனத்தி லுபாஸிக்கப்படும் விராட்புருஷன்) ஸர்வச்ஞனாகவன்றோ இருக்கிறான். ஆகவே அந்த விராட்புருஷனை **ईड्यम्**=ஸ்துதிக்கத்தகுந்தவனாகவும், **देवम्**=பிரகாசிப்பதுபற்றி ச்ஞானாதிகுணமுள்ளவனாகவும் சாஸ்திரமூலமறிந்து **निचाय्य**=அவனே தான் நான் எனக் கண்டு மிருப்பவன் இந்தச் சாந்தியை (தனதுபுத்தியில் ப்ரத்யக்ஷமான உபரதியை) அதிகமாக அடைகிறான். அதாவது:—ஞானகர்மஸமுச்சயானுஷ்டானத்தினால் விராட்புருஷனுடைய பதத்தை யடைகிறான் என்று பொருள். (17) (எ—று)

குறிப்பு—நாசிகேதாக்னிசயனத்தில் அடுக்கவேண்டிய கற்கள் எழுநூற்றிருபதுகளாகும். ஒருஸாவனமான வருஷத்தில் அதாவது: 360 நாட்களில். காலை மாலை இரண்டுவேளைகளிலும் செய்யவேண்டிய அக்னிஹோத்ரங்களும் 720 எண்ணுள்ளனவாகவே ஆகின்றன. ஆகவே கற்களின் ஸ்தானத்திலுள்ள அந்த 720 அக்னிஹோத்திரங்களினாலும் ஸம்பாதிக்கப்பட்ட ஸம்வத்ஸராக்னி (ஸம்வத்ஸராபிமானிதேவனான விராட்புருஷன்) நானே என்பதாய் அஹங்கிரஹமாக உபாஸித்து அந்த உபாஸனையுடன் நாசிகேதாக்னிசயனமென்ற கர்மாவையும் சேர்த்து அனுஷ்டிப்பவனுக்கு விராட்பதப்ராப்தியானது பலனாகவேற்படுகிறது எனக்கண்டு கொள்ளவும்.

அவதாரிகா பாஷ்யம்.—இப்பொழுது அக்னியைப் பற்றின உபாஸனம், அக்னிசயனம் (கர்மம்) இவற்றின் மூலம் வரும் பலனையும், அவற்றைக்கூறும் ப்ரகரணத்தையும் முடிக்கிறார்—

त्रिणाचिकेतस्त्रयमेतद्विदित्वा य एवं विद्वाꣳश्चिनुते नाचिकेतम्।
स मृत्युपाशान्पुरतः प्रणोद्य शोकातिगो मोदते स्वर्गलोके॥

त्रिणाचिकेतः। त्रयम्=यथोक्तं या इष्टका यावतीर्वा यथावेत्येतद्विदित्वा=अवगम्य यश्चैवमात्मरूपेणाग्निं विद्वांश्चिनुते=निर्वर्तयति नाचिकेतम्=अग्निं क्रतुं स मृत्युपाशानधर्माज्ञानरागद्वेषादिलक्षणान्, पुरतः=अग्रतः पूर्वमेव शरीरपातादित्यर्थः। प्रणोद्य=अपहाय शोकातिगः=मानसैर्दुःखैर्वर्जित इत्येतत्। मोदते स्वर्गलोके वैराजे विराडात्मस्वरूपप्रतिपत्त्या॥

---

(ப-ரை) **विद्वान्**=அக்னியை ஆத்மரூபமாகவுபாஸிக்கும் **यः**=எந்த **त्रिणाचिकेतः**=மூன்றுதடவை நாசிகேதாக்னிசயனஞ் செய்பவன் **एतत्**=இந்த **त्रयम्**=மூன்றையும் (அதாவது:—கற்கள் அதன் எண், அடுக்கும் முறை இம்மூன்றையுமென்றும்.) **विदित्वा**=அறிந்துகொண்டு **नाचिकेतम्**=நாசிகேதாக்னியை (அது ஸம்பந்தமான உபாஸனத்தை) **चिनुते**=செய்து முடிக்கின்றானோ **सः**=அவன் **मृत्युपाशान्**=மிருத்யுக்கயிறுகளை அதாவது:—அதர்மம், அக்ஞானம், ராகம், துவேஷம் முதலியவற்றை **पुरतः**=சரீரநாசத்துக்கு முந்தியே **प्रणोद्य**=போக்கிக் கொண்டு **शोकातिगः**=மானஸமான துக்கங்களைக் கடந்தவனாய் **स्वर्गलोके**=விராட்புருஷனுடைய உலகில் **मोदते**=ஸந்தோஷத்தை யடைகிறான். (18) (எ-று)

பாஷ்யம்.—த்ரிணசிகேதனானவன் மூன்றையும் சொல்லப்பட்டபடி, அதாவது:—கற்களின் ஸ்வரூபம், அவற்றின் எண், அதை யடுக்கும்முறை ஆகிய இம்மூன்றையும் என்றுபொருள். **विदित्वा**=அறிந்தும், எவன் இவ்விதம் ஆத்மஸ்வரூபமாக அக்னியை உபாஸித்தும் நாசிகேதம் என்ற அக்னியையும் அது ஸம்பந்தமான உபாஸனத்தையும், முயற்சியுடன் செய்துமுடிக்கின்றானோ அவன் மிருத்யுபாசங்களை அதாவது:—அதர்மம் அக்ஞானம் ராகம் துவேஷம் இவைரூபமானவைகளை **पुरतः**=முந்தியே அதாவது:—சரீரம் விழுவதற்கு முந்தியே என்பதுபொருள். **प्रणोद्य**=போக்கிக் கொண்டு சோகாதிகனாய் அதாவது: மானஸங்களான துக்கங்களினால் விடுபட்டவனாய் என்பது பொருள். **स्वर्गलोके**=விராட்பதத்

न्सन्नचिकेतोऽत्यस्राक्षीः परमेवाकांक्षन्नतिसृष्टवानसि सर्वमेतत्संसारभोग जातम्। अहो बतानुत्तमगुणोऽसि ॥ ११ ॥

**तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं गुहाहितं गह्वरेष्ठं पुराणम्। अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति ॥**

यं त्वं ज्ञातुमिच्छस्यात्मानं तं दुर्दर्शं=दुःखेन दर्शनमस्येति दुर्दर्शोऽति सूक्ष्मत्वात्तम्। गूढम् = गहनमनुप्रविष्टम्, प्राकृतविषयविकारविज्ञानैः प्रच्छन्नमित्येतत्। गुहाहितम्—गुहायाम्=बुद्धौ स्थितं तत्रोपलभ्यमान-त्वात्। गह्वरेष्ठम्—गह्वरे=विषमेऽनेकानर्थसङ्कटे तिष्ठतीति गह्वरेष्ठम्। यत

---

விலக்கினவனுக இருக்கின்றனே. அந்தோ! இது வெகு ஆஶ்சரிய மானது. ஒப்புயர்வற்ற குணமுள்ளவனுகவன்றே இருக்கின்றனே.

(ப-ரை) **गूढम्**-சுளுவில் பிரவேசிக்கவியலாத இடத்தை **अनु-प्रविष्टम्**-அடைந்தவனும், அதாவது:—ப்ரகிருதிபரிணுமமான விஷய விக்ஞானங்களினுல் மறைக்கப்பட்டவனும் **गुहाहितम्**-புத்தியில் பிரகாசிப்பவனும், **गह्वरेष्ठम्**-ராகத்வேஷாதிகளால் மிகவும் ஆயாஸத் தைத் தரக்கூடிய கார்யகாரண ஸங்காதத்திலிருப்பவனும் **दुर्दर्शम्**-ஞனதுபற்றியே சிரமப்பட்டு அறியத்தக்கவனும், **पुराणम्**-புராதன னுமான **तम्**-அந்த **देवम्**-எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக் கிற ஆத்மாவை **अध्यात्मयोगाधिगमेन**-மனதை விஷயங்களினின்றும் திருப்பி ஆத்மாவினிடம் வைத்தலையடைவதால் **मत्वा**-மனனம் செய்து **धीरः**-புத்தியைத் தன்வசமாக்கினவன் **हर्षशोकौ**-ஸுகதுக் கங்களை **जहाति**-விடுகிறுன். (12) (எ-று)

பாஷ்யம்.—எந்த ஆத்மாவை நீ அறியவிரும்புகின்றனேயோ அது மிகவும் ஸூக்ஷ்மமாக இருப்பதுபற்றி கஷ்டப்பட்டு அறியக் கூடியதாகவிருக்கிறது. மேலும், சுளுவில் பிரவேசிக்க முடியாத விடத்தை அடைந்துமிருக்கிறது. அதாவது:—ப்ரகிருதி காரியமான விஷய விகாரவிக்ஞானங்களால் மறைக்கப்பட்டிருக்கிறது என்றும். புத்தியில் அறியப்படுவதுபற்றி புத்தியிலிருப்பதாகவும் அது ஆகிறது. மேலும், **गह्वरे विषमे अनेकानर्थसङ्कटे**-ராகத்வேஷாதிகளால் மிகவும் துக்கத்தைத் தருக்கின்ற காரியகாரண ஸங்காதத்தில் இருக்கின்றது.

एवं गूढमनुप्रविष्टो गुहाहितश्चातो गह्वरेष्ठः। अतो दुर्दर्शः। तं पुराणम्=पुरातनम्, अध्यात्मयोगाधिगमेन=विषयेभ्यः प्रतिसंहृत्य चेतस आत्मनि समाधानमध्यात्मयोगः, तस्याधिगमः, तेन मत्वा देवमात्मानं धीरः हर्षशोकावात्मन उत्कर्षापकर्षयोरभावाज्जहाति॥ १२॥

**एतच्छ्रुत्वा संपरिगृह्य मर्त्यः प्रवृह्य धर्म्यमणुमेतमाप्य।**
**स मोदते मोदनीयꣳहि लब्ध्वा विवृतꣳसद्म नचिकेतसं मन्ये॥**

किं च एतत्=आत्मतत्त्वं यदहं वक्ष्यामि, तच्छ्रुत्वा=आचार्यप्रसादात्सम्यगात्मभावेन परिगृह्य=उपादाय, मर्त्यः=मरणधर्मा, धर्मादनपेतं

---

யாதுகாரணத்தினுல் கூடத்தை யடைந்ததாயும் குஹாஹிதமாயுமிருக்கிறகோ அக்காரணத்தினுல் கஹ்வரத்தில் (காரியகரணஸமூஹத்தில்) இருப்பையுடையதாகவாகிறது. ஆனதுபற்றி துர்தர்சமுமாகிறது. புராதனனுன அந்தத்தேவனை அத்யாத்மயோகாதிகமத்தினுல்=விஷயங்களிலிருந்து திருப்பி ஆத்மாவினிடத்தில் சித்தத்தை வைத்தல் அத்யாத்மயோகமாகும். இதன் ப்ராப்தி அதிகமமாகும் அதனுல் தேவனுன ஆத்மாவை மனனஞ்செய்து தீரனுனவன் ஹர்ஷசோகங்களை விடுகிருன். ஆத்மாவுக்கு மேலோ கீழோ இல்லாதபடியால் இவ்விதம் சொல்லப்பட்டது. (12) (எ-று)

(ப-ரை) **एतत्**—இந்த ஆத்மதத்துவத்தை **श्रुत्वा**—ஶ்ரவணஞ்செய்து **संपरिगृह्य**—நன்கு ஆசாரிய ப்ரஸாதத்தினுல் ப்ரத்யகாத்மாவாக நிஶ்சயித்துக் கொண்டு, **धर्म्यम्**—தத்துவஞ்ஞான ரூபமான தர்மத்தைவிட்டு விலகாத இந்த தத்துவத்தை **प्रवृह्य**—சரீரத்தினின்றும் வேறுபடுத்தி அதாவது:—நிதித்யாஸனஞ்செய்து, **एतम्**—இந்த **अणुम्**—ஸூக்ஷ்மமான ஆத்மாவை, **आप्य**—அடைந்து **मर्त्यः**—சாஸ்திராதிகாரம் பெற்ற மனிதனுகிற **सः**—அந்த வித்வான், **मोदनीयम्**—ஸந்தோஷிக்கத்தகுந்த ஆத்மாவை அடைந்து **मोदते**—ஸந்தோஷிக்கிருன். **सद्म**—ப்ரம்ஹரூபமான வீடானது **नचिकेतसम्**—நசிகேதஸ் என்ற உன்னைக் குறித்து **विवृतम्**—திறக்கப்பட்டிருப்பதாக **मन्ये**—எண்ணுகிறேன் உன்னை மோக்ஷத்துக்குத்தகுதியுள்ளவனுக எண்ணுகிறேன் என்பது கருத்து. (13) (எ-று)

धर्म्यम्, प्रवृह्य=उद्यम्य पृथक्कृत्य शरीरादेः, अणुम्=सूक्ष्मम्, एतम्=आत्मानम्, आप्य=प्राप्य, सः=मर्त्यो विद्वान् मोदते मोदनीयम्=हर्षणीयमात्मानं लब्ध्वा। तदेतदेवंविधं ब्रह्म, सद्म=भवनं नचिकेतसं त्वां प्रति अपावृतद्वारं विवृतमभिमुखीभूतं मन्ये मोक्षार्हं त्वां मन्य इत्यभिप्रायः॥

अन्यत्र धर्मादन्यत्राधर्मादन्यत्रास्मात्कृताकृतात्।
अन्यत्र भूताच्च भव्याच्च यत्तत्पश्यसि तद्वद ॥ १४ ॥

---

பாஷ்யம்.—மேலும், எதை நான் சொல்லப்போகின்றேனே அந்த ஆத்மதத்துவத்தை ஶ்ரவணஞ்செய்து ஆசாரிய ப்ரஸாதத்தினுல் நன்கு பரிக்ரஹித்து=பெற்று, **मर्त्यः**—மரணதர்மமுள்ளவன் **धर्म्यम्** தர்மத்தைவிட்டு(அபரோக்ஷ*ஸாக்ஷாத்காரரூபமானதர்மத்தை விட்டு) விலகாத இதை **प्रवृह्य**—உயரெடுத்து அதாவது:—சரீராதிகளினின்றும் தனியாகப் பிரித்து, ஸூக்ஷ்மமான இந்த ஆத்மாவை அடைந்து அவன்—மனிதனுனவித்வான், ஸந்தோஷிக்கத்தக்கதான ஆத்மாவையடைந்து ஸந்தோஷத்தையடைகிறுன். ஆகவே இவ்விதமான இந்த ப்ரம்ஹமாகிற வீடானது நசிகேதஸ்ஸான உன்னைக் குறித்து திறக்கப்பட்ட வாயிற்படியை யுடையதாக இருக்கிறது. அதாவது:—அபிமுகமாகவிருக்கிறது என்று எண்ணுகிறேன். மோக்ஷார்ஹனுக உன்னை எண்ணுகிறேன் என்பது கருத்து. (13)

(ப—ரை) **धर्मात्**—தர்மத்தைக் காட்டிலும் (அதன் பலனைக்காட்டிலும், அதன் ஸாதனங்களைக் காட்டிலும்) **अन्यत्र**—வேறுபட்டதும், **अधर्मात्**—அதர்மத்தைக் காட்டிலும் (அதன் பலனைக் காட்டிலும், அதன் ஸாதனங்களைக்காட்டிலும்) **अन्यत्र**—வேறுபட்டதும், **अस्मात्**—இந்த, **कृताकृतात्**—காரியம், காரணம் இவற்றைக்காட்டிலும் **अन्यत्र**—வேறுபட்டதும், **भूताच्च**—சென்ற காலத்தைக்காட்டிலுமும் **भव्याच्च**—எதிர்காலத்தைக் காட்டிலுமும், (**वर्तमानात्**—நிகழ்காலத்தைக் காட்டிலுமும் **अन्यत्र**—வேறுபட்டதுமாக **यत्**—எந்தப் பொருளை (ப்ரம்ஹத்தை) **पश्यसि**—அறிவீரோ, **तत्**—அதை, **वद**—சொல்லுவீராக. (14)

---

* अयं हि परमो धर्मो यद्योगेनात्मदर्शनम्—அபரோக்ஷ ஸாக்ஷாத்காரரூபமான ஞானயோகத்தினுல் ஆத்மாவைக் காணல் என்பது யாதுண்டோ இதுவேயன்றோ மேலானதர்மமாகும் என்ற வசனத்தையொட்டி இவ்விதம் சொல்லப்பட்டது.

यद्यहं योग्यः, प्रसन्नश्चासि भगवन्मांप्रति, अन्यत्र धर्मात्=शास्त्रीयाद्धर्मानुष्ठानात्तत्फलात्तत्कारकेभ्यश्च पृथक्भूतमित्यर्थः। तथान्यत्राधर्मात्, तथान्यत्रास्मात्कृताकृतात्=कृतम्=कार्यम्, अकृतम्=कारणम्, अस्मादन्यत्र। किं च, अन्यत्र भूताच्च=अतिक्रान्तात्कालात्, भव्यात् च=भविष्यतश्च तथा वर्तमानात्, कालत्रयेण यन्न परिच्छिद्यत इत्यर्थः। यत्=ईदृशं वस्तु सर्वव्यवहारगोचरातीतं पश्यसि=जानासि तद्वद मह्यम्॥ १४॥

इत्येवं पृष्टवते मृत्युरुवाच पृष्टं वस्तु विशेषणान्तरं च विवक्षन्—

**सर्वे वेदा यत्पदमामनन्ति तपांसि सर्वाणि च यद्वदन्ति। यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण ब्रवीम्योमित्येतत्॥ १५॥**

---

பாஷ்யம்.—ஹே பகவன்! நான் யோக்கியனாகவிருந்து அதன்மூலம் என்னிடம் நீர் ப்ரஸாதமுள்ளவராகவு மிருப்பீராகில் **धर्मात्**—சாஸ்திரத்திற்சொல்லிய தர்மானுஷ்டானத்தைக் காட்டிலும், அதன் பலனைக்காட்டிலும், அதன் ஸாதனங்களை காட்டிலும் **अन्यत्र**—வேறாகவானதுமென்று பொருள். அவ்விதமே அதர்மத்தைக் காட்டிலும் வேறாகவானதும், அவ்விதமே **अस्मात्कृताकृताद-न्यत्र**—கிருதம்—காரியம், அகிருதம்—காரணம் இவற்றைக்காட்டிலும் வேறாகவானதும், மேலும் **भूताच्च**—சென்றகாலத்தைக் காட்டிலும் **भव्यात्**—எதிர்காலத்தைக் காட்டிலும் **वर्तमानात्**—நிகழ்காலத்தைக் காட்டிலும் வேறாகவானதும், மூன்றுகாலங்களினாலும் எதுபரிச்சேதத்தை யடையாததோ என்பது பொருள். எல்லாவியவஹாரவிஷயத்தையும் கடந்ததான இத்தகைய யாதொருபொருளை அறிகின்றீரோ அதை எனக்குச் சொல்லும். (14) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—இவ்விதம் கேட்டவனான நசிகேதஸ்ஸையும் பொருட்டு கேட்டபொருளையும் வேறுவிசேஷணங்களையும் சொல்லவிருப்பங்கொண்டு யமன் சொல்லத் தொடங்குகிறார்—

(ப—ரை) **सर्वे**—எல்லா **वेदाः**—வேதங்களும் **यत्**—எதை **पदम्**—அறியத்தகுந்ததாக **आमनन्ति**—உபதேசிக்கின்றனவோ **सर्वाणि**—ஸமஸ்தமான, **तपांसि**—தபஸ்ஸுகளும், **यत्**—எதைக்குறித்தென **वदन्ति**—

सर्वे वेदाः यत्पदम्=पदनीयं गमनीयमविभागेन आमनन्ति प्रतिपादयन्ति, तपांसि सर्वाणि च यद्वदन्ति=यत्प्राप्त्यर्थानीत्यर्थः। यदिच्छन्तो ब्रह्मचर्यं गुरुकुलवासलक्षणमन्यद्वा ब्रह्मप्राप्त्यर्थं चरन्ति तत्ते तुभ्यं पदं यद्ज्ञातुमिच्छसि संग्रहेण=संक्षेपतो ब्रवीमि, ओमित्येतत्। तदेतत्पदं यद्बुभुत्सितं त्वया यदेतदोमित्योंशब्दवाच्यमोंशब्दप्रतीकं च ॥ १५ ॥

---

பெரியோர் சொல்லுகின்றனரோ **यत्**-எதை, **इच्छन्तः**-விரும்பிக்கொண்டு, **ब्रह्मचर्यम्**-குருகுலவாஸரூபமான நைஷ்டிக ப்ரம்ஹசர்யத்தை, அல்லது ப்ரம்ஹ ப்ராப்த்திக்குறிய வேறு ப்ரம்ஹசரியத்தை, **चरन्ति**-செய்கின்றனரோ, **तत्**-அந்த **पदम्**-ஸ்வரூபத்தை **ओम्**-ப்ரணவமென்ற **एतत्**-இந்த ஸ்வரூபமாக **संग्रहेण**-சுருக்கமாக **ते**-உனக்கு **ब्रवीमि**-சொல்லுகிறேன். (15) (எ-று)

பாஷ்யம்.—எல்லா வேதங்களும் எதைப்பதமாக-அடையத்தகுந்ததாகப் பரமதாத்பரியத்துடன் உபதேசிக்கின்றனவோ, தபஸ்ஸுகள் யாவும் எதையுத்தேசித்தது எனச் சொல்லுகின்றனரோ அதாவது:-எதையடைவதற்குவேண்டி யேற்பட்டனவென்று சொல்லுகின்றனரோ என்று பொருள். எதை இச்சித்துக்கொண்டு ப்ரம்ஹசரியத்தை-குருகுலவாஸரூபமான (*)நைஷ்டிக ப்ரம்ஹசரியத்தை, அல்லது (ப்ரம்ஹ வித்யைக்குவேண்டி இந்திரனும், விரோசனனென்ற அசுர அரசனும் அனுஷ்டித்தது போன்ற வேறு ப்ரம்ஹசரியத்தைச் செய்கின்றனரோ, எதை நீ அறிய விரும்புகின்றனையோ அந்த ஸ்வரூபத்தை உனக்குச் சுருக்கமாக (அதாவது: மனத்தில் வாங்கித் தியானிக்கத்தக்கபடி ஸோபாதிகமாக) சொல்லுகிறேன். எது உன்னால் அறிய விரும்பப்பட்டதோ, யாதொரு இது ஓம் என்ற சப்தத்தின் பொருளானதோ, அல்லது ஓம் என்ற சப்தத்தை ப்ரதீகமாகவுடையதோ அதுவே இந்த ஸ்வரூபமாகும். (15)

---

(*) "अत्यन्तमेवाचार्यकुले आत्मानमवसादयन्" என்ற ஶ்ருதிப்படி தனது சரீரம் போகும்வரை குருகுலத்தில் வசித்துக்கொண்டு ஆத்மானுஸந்தானத்திலீடுபடுபவன் நைஷ்டிகப்ரம்ஹசாரியெனப் படுவான். வித்யை முடியும்வரை குருகுலவாஸம் செய்து பிறகு கிருஹஸ்தாசிரமம் செல்லுபவன் உபகுர்வாணக ப்ரம்ஹசாரி எனப்படுவோன்.

एतद्ध्येवाक्षरं ब्रह्म एतद्ध्येवाक्षरं परम् ।
एतद्ध्येवाक्षरं ज्ञात्वा यो यदिच्छति तस्य तत् ॥१६॥

अत एतद्ध्येवाक्षरं ब्रह्मापरम्, एतद्ध्येवाक्षरं परं च, तयोर्हि प्रतीकमेतदक्षरम्। एतद्ध्येवाक्षरं ज्ञात्वा=उपास्य ब्रह्मेति, यो यदिच्छति परमपरं वा तस्य तद्भवति। परं चेज्ज्ञातव्यमपरं चेत्प्राप्तव्यम्॥ १६॥

---

(ப—ரை) एतत्—இந்த अक्षरमेवहि—எழுத்தே (ப்ரணவமே) அன்றோ ब्रह्म—அபரம் ப்ரம்ஹ (ஸகுண ப்ரம்ஹ) மாகவாகிறது. एतत्—இந்த अक्षरमेवहि—அக்ஷரமேயன்றோ परम्—பரம் ப்ரம்ஹமாகவு மாகும். एतत्—இந்த अक्षरमेवहि—அக்ஷரத்தையேயன்றோ ज्ञात्वा—அபர ப்ரம்ஹமாகவும் பரம்ப்ரம்ஹமாகவுமறிந்து यः—எவன் यत्—எதை इच्छति—இச்சிக்கின்றானோ तस्य—அவனுக்கு तत्—அது भवति—அடையத்தக்கதாகவோ அறியத்தக்கதாகவோ ஆகிறது. (16)(எ—று)

பாஷ்யம்.—ஆனதுபற்றி இந்த அக்ஷரமே (ப்ரணவமே) அன்றோ அபரம் ப்ரம்ஹமாகவும், இந்த அக்ஷரமேயன்றோ பரம் ப்ரம்ஹமாகவும் ஆகிறது. அந்த ஸகுணநிர்க்குண ப்ரம்ஹங்களுக்கு இந்த ப்ரணவம் ப்ரதீகமாக (ஆலம்பனமாக) ஆகின்றது. இந்த அக்ஷரத்தையே பரம்† ப்ரம்ஹமாகவறிந்தும், அபரம் ப்ரம்ஹமாக உபாஸித்தும் எவன் பரத்தையோ, அபரத்தையோ எதை விரும்புகின்றானோ அவனுக்கு அது ஏற்படுகிறது. அதாவது:—பரம் ப்ரம்ஹமானால் ஜ்ஞேயமாகவும், அபரம் ப்ரம்ஹமானால் அடையக்கூடியதாகவும் ஆகிறது என்றும்.‡ (16) (எ—று)

---

† ப்ரம்ஹக்ஞானத்துக்கும், உபாஸனத்துக்குமுள்ள பேதத்தை நமது ஸூத்திரபாஷ்யம் 1-வது அத்தியாயம் 63-வது பக்கத்தில் பரக்கக் காண்க.

‡ எந்த சப்தத்தைச் சொன்னதும் எதுஸ்புரிக்கிறதோ அது அந்த சப்தத்தின் பொருளாகும் என்பது ப்ரஸித்தமாக இருக்கிறது. ஸமாஹித சித்தமுள்ளமஹான்களுக்கு ஓம்காரத்தையுச்சரித்ததும் ஸாக்ஷியான எந்தப் பொருளின் ஸ்புரணமேற்படுகிறதோ அது ஓங்காரத்தின் வாச்யமான பொருளாகும். அதாவது:—ஸத்வகுணத்தை ப்ரதானமாகக்கொண்ட மாயாவச்சின்னமும் ஓங்காரத்தை உபாதியாகக் கொண்டதுமான ப்ரம்ஹ

**एतदालंबनं श्रेष्ठमेतदालंबनं परम् ।**
**एतदालंबनं ज्ञात्वा ब्रह्मलोके महीयते ॥ १७ ॥**

यत एवम्, अत एतदालंबनम्, एतद्ब्रह्मप्राप्त्यालंबनानां श्रेष्ठम्=प्रशस्यतमम्=एतदालंबनं परमपरं च। परापरब्रह्मविषयत्वात्। एतदालंबनं ज्ञात्वा ब्रह्मलोके महीयते। परस्मिन्ब्रह्मणि, अपरस्मिश्च ब्रह्मभूतो ब्रह्मवदुपास्यो भवतीत्यर्थः॥ १७॥

अन्यत्र धर्मादित्यादिना पृष्टस्यात्मनोऽशेषविशेषरहितस्याऽऽलंबनत्वेन प्रतीकत्वेनचोङ्कारो निर्दिष्टः अपरस्य च ब्रह्मणो मन्दमध्यमप्रतिप-

---

(ப—ரை) **एतत्**—இந்த **आलंबनम्**—ஆலம்பனமானது **श्रेष्ठम्**—மற்ற ஆலம்பனங்களுக்குள் சிறந்ததாகவாகும். **एतत्**—இந்த **आलम्बनम्**—ஆலம்பனமானது **परम्**—பரமாகவும் ஆகும். **एतत्**—இந்த **आलम्बनम्**—ஆலம்பனத்தை **ज्ञात्वा**—அறிந்து **ब्रह्मलोके**—ப்ரம்ஹலோகத்தில் **महीयते**—பூஜிக்க (ப்ரம்ஹம் போல உபாஸிக்க) தக்கவனாக வாகிறான். (17) (எ—று)

பாஷ்யம்.—யாதுகாரணத்தினால் (ப்ரணவம்) முற்கூறியபடியாகிறதோ அக்காரணம்பற்றி இந்த ஆலம்பனமானது ப்ரம்ஹ ப்ராப்த்திக்குறிய ஆலம்பனங்களுக்குள் மிக்கச்சிறந்ததாகவாகிறது. பரம்ப்ரம்ஹம் அபரம் ப்ரம்ஹம் இவற்றை விஷயமாகக் கொண்டிருப்பதுபற்றி இந்த ஆலம்பனம் பரமாகவும் அபரமாகவும் ஆகும். இந்த ஆலம்பனத்தையறிந்து ப்ரம்ஹலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். பரப்ரம்ஹத்தினிடத்திலும் அபரப்ரம்ஹத்திலும் ப்ரம்ஹபாவத்தையடைந்தவன் ப்ரம்ஹம்போலவே உபாஸ்யனாகவாகிறான் என்பது பொருள். (17) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—"**अन्यत्र धर्मात्**—தர்மத்தைவிட வேறுபட்டது" என்றதாதியால் கேட்கப்பட்டதும், எல்லாவிதமான பேதமுமற்றதுமான சுத்த ஆத்மாவுக்கு வாசகமாகவும், ப்ரதீகமாக

---

மாக நானிருக்கிறேன் எனத் தியானிக்கவேண்டுமென்பது பெறப்பட்டது. அல்லது ப்ரணவத்தில் ப்ரம்ஹபுத்தி செய்யவேண்டும் அதாவது: ப்ரணவத்தை ப்ரம்ஹமாகத்தியானிக்கவேண்டும் என்பது பெறப்பட்டது,

त्तॄन् प्रति । अथेदानीं तस्योङ्कारालवनस्यात्मनः साक्षात्स्वरूपनिर्दिधारयिषयेदमुच्यते—

**न जायते म्रियते वा विपश्चिन्नायं कुतश्चिन्न बभूव कश्चित् ।**
**अजो नित्यश्शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे ॥**

न जायते—नोत्पद्यते, म्रियते वा—न म्रियते च । उत्पत्तिमतो वस्तुनोऽनित्यस्यानेकविक्रियाः, तासामाद्यन्ते जन्मविनाशलक्षणे विक्रिये इहा-

---

வும் ஓங்காரமானது சொல்லப்பட்டது. மந்தமாயும், மத்தியமமாயுமுள்ள அறிவுள்ளவர்களைக் குறித்து அபரப்ரம்ஹத்துக்கும் வாசகமாகவும், ப்ரதீகமாகவும் ப்ரணவம் சொல்லப்பட்டது. பிறகு இப்பொழுது ஓங்காரத்தை வாசகமாகவுடைய அந்த (ச்சுத்த) ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தை நேரில் நிர்த்தாரணம் செய்யும் விருப்பத்துடன் இது ஆரம்பிக்கப்படுகிறது—

(ப—ரை) **विपश्चित्**—மாறுதலைதன்னியஸ்வபாவனுன, **अयम्**—இந்த ஆத்மாவானது, **न जायते**—ஜனனமென்ற விகாரத்தை(மாறுதலை) யடைவதில்லை, **न म्रियते वा**—மரணமென்ற கடைசி விகாரத்தையுமடைவதில்லை. **कुतश्चित्**—வேறுகாரணத்தினின்றும், **न बभूव**—உண்டாவதுமில்லை. இதையுண்டாக்கக்கூடிய காரணமெதுவுமில்லாமை பற்றி ஸ்வரூபத்தினுல் உத்பத்தியற்றது என்பது கருத்து. **कश्चित् न बभूव**—இதனிடமிருந்து வேறு ஒன்று முண்டாவதுமில்லை. அதாவது:—காரியம் வாயிலாகவும் இதற்கு உத்பத்திகிடையாது என்பது கருத்து. ஆனதுபற்றி இது **अजः**—ஜனனமற்றது. **नित्यः**—அழிவற்றது. **शाश्वतः**—எப்பொழுதுமுள்ளது. ஆனதுபற்றி **अयम्**—இது **पुराणः**—முன்னருமே புதுமையாகவே யுள்ளது. **शरीरे**—தேஹமானது, **हन्यमाने सत्यपि**—அழிக்கப் படுவதாயினுங்கூட **न हन्यते**—அழிக்கப்படாததாக விருக்கிறது. (18) (எ—று)

பாஷ்யம்.—**न जायते**—உண்டாவதில்லை. **म्रियते वा**—மரணத்தையுமடைவதில்லை. உத்பத்தியுள்ளதும், அநித்யமுமான பொருளுக்கு அனேகம் விக்ரியை (மாறுதல்) களுண்டு. அவற்றுள் ஆதியிலும் அந்தத்திலுமுள்ள ஜனனம் விநசம் இவை ரூபமான விகாரங்கள் இந்த ஆத்மாவினிடத்தில் முதலில் மறுக்கப்படுகின்றன. ஆகவே

त्मनि प्रतिषिद्धयेते प्रथमं सर्वविक्रियाप्रतिषेधार्थं न जायते म्रियतेवेति। विपश्चित्-मेधावी, अविपरिलुप्तचैतन्यस्वभावात्। किञ्च, नायमात्मा कुतश्चित्कारणान्तराद्बभूव। स्वस्माच्चात्मनो न बभूव कश्चिदर्थान्तरभूतः। अतोऽयमात्मा अजः, नित्यः। शाश्वतः=अपक्षयविवर्जितः। यो ह्यशाश्वतः सोऽपक्षीयते। अयं तु शाश्वतः, अत एव पुराणः=पुरापि नव एवेति। यो-ह्यवयवोपचयद्वारेणाभिनिर्वर्त्यते स इदानीं नवः, यथा कुंभादिस्तद्विपरीत-स्त्वात्मा पुराणो वृद्धिविवर्जित इत्यर्थः। यत एवमतो न हन्यते=नहिंस्यते हन्यमाने शस्त्रादिभिः शरीरे। तत्स्थोऽप्याकाशवदेव ॥ १८ ॥

हन्ता चेन्मन्यते हन्तुं हतश्चेन्मन्यते हतम्।
उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९ ॥

---

**न जायते म्रियते वा** என்றது எல்லா விக்ரியைகளேயும் மறுக்கவேண்டி சொல்லப்பட்டதாகவாகும். **विपश्चित्**=மேதாவீ (என்று பொருள்.) அழியாத சைதன்னிய ஸ்வபாவத்தையுடையதாயிருப்பதால் (இவ் விதம கொள்ளவேண்டும்.) மேலும், இந்த ஆத்மா **कुतश्चित्**=வேறு காரணத்தினின்றுமுண்டாவதில்லை. சொந்த ஸ்வரூபத்தினின்றும் வேறுபட்ட பொருளொன்று முண்டாவதுமில்லை. ஆனதுபற்றி இந்த ஆத்மா அஜனும், நித்யனுமாகிறது. **शाश्वतः**=தேய்வற்றது மாகிறது. எது ஶாஶ்வதமாக இல்லாததோ அஃதன்றோ தேய் தலேபடைகிறது. இதுவோ ஶாஶ்வதமாக=(எப்பொழுதும்) இருப் பது. ஆகவே **पुराणः**=முந்தியும் புதிதாகவே உள்ளது. எது அவ யவங்களின் பெருக்குவாயிலாகப் புதிதாயுண்டுபண்ணப்படுகிறதோ அது இப்பொழுது புதிதாகவாகிறது. குடம் முதலியதுபோலவாம். அதற்கு நேர்மாறான ஆத்மாவோ **पुराणः**=விருத்தியற்றது என்பது பொருள். எக்காரணம்பற்றி இவ்விதமிருக்கிறதோ அக்காரணம் பற்றி சஸ்திரம் முதலியவற்றல் சரீரமானது ஹிம்ஸிக்கப்படினுங் கூட இது ஹிம்ஸிக்கப்படுவதில்லை. அந்தச் சரீரத்திலிருப்பினுங் கூட ஆகாசம் போலவே இருக்கிறது என்றும். (18) (எ-று)

(ப-ரை) சரீரத்தில் மட்டும் ஆத்மபுத்தியையுடையவனுன **हन्ता**=கொல்லுகின்றவனுனவன் இவ்விதம் அஸங்கனுகவிருப்பினுங்

एवं भूतमप्यात्मानं शरीरमात्रात्मदृष्टिर्हन्ता चेत्=यदि मन्यते चिन्तयति हन्तुम्=हनिष्याम्येनमिति, योऽप्यन्यो हतः सोऽपिचेन्मन्यते हतमात्मानं हतोऽहमिति, उभावपि तौ न विजानीतः स्वमात्मानं, यतो नायं हन्ति, अविक्रियत्वादात्मनः। तथा न हन्यते आकाशवदविक्रियत्वादेव। अतोऽ

---

கூட ஆத்மாவை हन्तुम्=ஹனனக்ரியைக்கு விஷயமாக்க मन्यते चेत्= எண்ணுவானேயானல் அதாவது:—ஹனனமென்ற க்ரியையோ, அதன் பலனன ஹனனமோ தன்னிடம் (ஆத்மாவினிடம் உண்மையில்) இருப்பதாக எண்ணுவானேல் என்றும். சரீரத்தில் மட்டும் ஆத்மபுத்தியையுடைய அதே மாதிரியான வேறு மனிதன் हतः= அடிக்கப்பட்டவனய் हतम्=அஸங்கனன ஆத்மாவை அடிக்கப்பட்டவனக அதாவது:—ஹனனமென்ற பலனுக்குத்தன்னையாஶ்ரயனக என்றும். मन्यते चेत्=எண்ணுவானேயானலும் तौ उभौ=அவ்விருவரும் न विजानीतः=ஆத்மஸ்வரூப ச்ஞானமற்றவர்களேயாவர். अयम्= இந்த ஆத்மாவானது न हन्ति=ஹனனமென்ற க்ரியைக்குக் கர்த்தாவுமன்று. न हन्यते=ஹனனமென்ற க்ரியைக்குக் கர்மாவுமன்று.

பாஷ்யம்.—இவ்விதம் அஸங்கஸ்வபாவனன ஆத்மாவைச் சரீரமாத்திரத்தில் ஆத்மபுத்தியுள்ளவன் (சரீரத்தையே ஆத்மாவாக எண்ணுபவன்) ஹந்தாவாக=ஹனன க்ரியைக்குக் கர்த்தாவாகத் தன்னை எண்ணி இந்த ஆத்மாவை ஹனனக்ரியைக்கு விஷயமாக்குவதற்கு அதாவது:—'இவனைக்கொல்லப்போகிறேன்' என எண்ணுவானுலும் (சரீரத்தைமட்டுமாத்மாவாகவெண்ணின) இவனைக்காட்டிலும் மற்றவனன ஹதன்=அடிக்கப்பட்டவன் எவனே, அவனும் "நான் அடிக்கப்பட்டேன்" என ஆத்மாவை ஹதனக=ஹனனக்கிரியா பலனன ஹிம்ஸைக்கு ஆஶ்ரயனக எண்ணுவானேயானுலும் அவர்களிருவரும் தங்களது ஆத்மாவை அறிந்தவர்களாகார். ஏன்? ஆத்மா அவிக்ரியனக இருப்பதுபற்றி இவன் ஹந்தா=ஹனன க்ரியைக்குக் கர்த்தா அன்று. அவ்விதம் ஆகாசம்போல அவிக்ரியனக இருப்பதுபற்றியே ஆத்மா ஹிம்ஸிக்கப்படுவதும் (ஹனன க்ரியைக்குக் கர்மாவாகவாவதும்) இல்லை ஆனதுபற்றி தர்மாதர்மாதிரூபமான ஸம்ஸாரமானது ஆத்மக்ஞானமில்லாதவனை விஷயமாகக் கொண்டதாகிறதேயொழிய ப்ரம்ஹக்ஞானம் வந்தவனுக்

नात्मज्ञ विषय एव धर्माधर्मादिलक्षणस्संसारो न ब्रह्मज्ञस्य, श्रुतिप्रामाण्यात् न्यायाच्च धर्माधर्माद्यनुपपत्तेः॥

कथं पुनरात्मानं जानातीति। उच्यते—

**अणोरणीयान्महतो महीयानात्मास्य जन्तोर्निहितो गुहायाम्।**
**तमक्रतुः पश्यति वीतशोको धातुप्रसादान्महिमानमात्मनः॥**

अणोः=सूक्ष्मात्, अणीयान्=श्यामाकादेरणुतरः। महतः=महत्परिमाणात्, महीयान्=महत्तरः पृथिव्यादेः। अणुमहद्वा यदस्ति लोके वस्तु तत्तेनैवात्मना नित्येनाऽऽत्मवत्संभवति। तदात्मना विनिर्मुक्तमसत्संपद्यते।

---

கன்று. ஏன்? ஶ்ருதி ப்ராமாண்யத்தாலும் போதியயுக்தியினுலும் ஆத்மாவுக்கு தர்மாதர்மாதிகள் பொருந்தாததாக இருப்பதே அதன் காரணமாகும். (19) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—ஆத்மாவை எவ்விதமறிகிறுன் எனின்? அது அடுத்த மந்திரத்திஞற் சொல்லப்படுகிறது—

(ப—ரை) **अणोः**=அணுபரிமாணமுள்ள பொருளைக் காட்டிலும் **अणीयान्**=மிக்க அணுவானதும், **महतः**=மஹத்பரிமாணமுள்ள பொருளைக்காட்டிலும் **महीयान्**=மிக்கப் பெரிதானதுமான **आत्मा**=ஆத்மாவானது, **अस्य**=இந்த **जन्तोः**=ப்ரம்ஹாதி ஸ்தம்பம் என்ற சிறு புழுவரையுள்ள ப்ராணி ஸமூஹத்தின் **गुहायाम्**=ஹிருதயத்தில் **निहितः**=(ப்ரகாசித்துக்கொண்டு) இருக்கிறது. **तम्**=அந்த ஆத்மாவை **अक्रतुः**=காமனையற்றவன் **पश्यति**=ஸாக்ஷாத்கரிக்கிறுன். **धातुप्रसादात्**—**धातु**=மனது முதலிய கரணங்களின் **प्रसादात्**=தெளிவினுல் **आत्मनः**=ஆத்மாவனுடைய **महिमानम्**=ஸ்வரூபத்தை [**दृष्ट्वा**=அதாகவே நானிருக்கிறேன் எனவனுபவித்து] **वीतशोकः**=சோகநிவிருத்தியையடைந்தவனுகவாகிறுன். (20) (எ—று)

பாஷ்யம்.—அணுவான ஶ்யாமாகமென்ற சிறு தான்யத்தைக் காட்டிலும் அணீயான் மிக்க நுட்பமானதும், மஹத்பரிமாணமுள்ள ப்ருதிவீ முதலியவற்றைக் காட்டிலும் மஹீயான்=மிக்கப்பெரிதுமான இந்த ஆத்மாவானது இந்த ஜந்துவின்=ப்ரம்ஹா முதல் ஸ்தம்பமென்ற சிறு புழு ஈருகவுள்ள ப்ராணியின், ஹிருதயத்தில் ஆத்ம

तस्मादसावेवात्माणोरणीयान्महतो महीयान् सर्वनामरूपवस्तूपाधिकत्वात्। स चात्मा, अस्य जन्तोः=ब्रह्मादिस्तंबपर्यन्तस्य प्राणिजातस्य गुहायाम्= हृदये, निहितः आत्मभूतः स्थित इत्यर्थः। तमात्मानं दर्शनश्रवणमननविज्ञानलिङ्गम्, अक्रतुः=अकामः दृष्टादृष्टबाह्यविषयोपरत बुद्धिरित्यर्थः। यदा चैवं तदा मनआदीनि करणानि धातवः शरीरस्य धारणात्प्रसीदन्तीत्येषां धातूनां प्रसादादात्मनो महिमानं कर्मनिमित्तवृद्धिक्षयरहितं पश्यति= अयमहमस्मीति साक्षाद्विजानाति। ततो वीतशोको भवति ॥ २० ॥

अन्यथा दुर्विज्ञेयोऽयमात्मा कामिभिः प्राकृतपुरुषैः, यस्मात्—

---

பூதமாக இருக்கிறது என்பது பொருள். உலகில் அணுவாகவோ மஹத்தாகவோ எந்த வஸ்து இருக்கிறதோ அது நித்யனுன அந்த ஆத்மாவினுலேயே ஆத்மாவுள்ளதாகவாகிறது. அந்த ஆத்மாவினுல் விடப்பட்டது அஸத்தாகவாகிவிடுகிறது. ஆனதுபற்றி இந்த ஆத்மாவே நாமரூபமுள்ள எல்லா வஸ்துவையும் உபாதியாகக் கொண்டிருப்பதால் அணுவுக்கு அணுவாகவும், மஹத்துக்கு மஹத்தாகவும் ஆகிறது. தர்சனம், ஸ்ரவணம், மனனம், விக்ஞானம் இவற்றை லிங்கமாகக்கொண்ட அந்த ஆத்மாவை அக்ரது:=காமனையற்றவன் அதாவது:—திருஷ்டமாயும் அதிருஷ்டமாயுமுள்ள பாஹ்யமான விஷயங்களினின்றும் வைராக்கியத்தைபடைந்த புத்தியுள்ளவன் என்பது பொருள். ஸாக்ஷாத்கரிக்கிருன். எப்பொழுது இவ்விதம் வைராக்கியத்தையடைந்தவனுகவாகிருனே அப்பொழுது சரீரத்தைத் தரிப்பதால் தாதுக்கள் எனப்படும் மனம் முதலிய கரணங்கள் தெளிவையடைகின்றன. அந்தத் தாதுக்களின் தெளிவினுல் ஆத்மாவின் மஹிமையை=கர்ம நிமித்தமாக ஏற்படும் விருத்தியோ தேய்வோ அற்றிருத்தலே, **पश्यति**=இந்த ஆத்மாவாக நானிருக்கிறேன் என ஸாக்ஷாத்கரிக்கிருன். அதன் மூலம் வீதசோகனுக=ஸம்ஸார பந்தமற்றவனுக ஆகிருன். (20) (எ-று)

அவதாரிகா பாஷ்யம்.—காமிகளும், ப்ரகிருதிவசப்பட்டவர்களுமான புருஷர்களால் வேறு ஸாதனங்களால் இந்த ஆத்மாவானது அறியமுடியாததாகவிருக்கிறது. ஏன்?

आसीनो दूरं व्रजति शयानो याति सर्वतः ।
कस्तं मदामदं देवं मदन्यो ज्ञातु मर्हति ॥ २१ ॥

आसीनः=अवस्थितोऽचल एव सन्, दूरं व्रजति, शयानो याति सर्वतः, एवमसावात्मा देवः, मदामदः=समदोऽमदश्च=सहर्षोऽहर्षश्च विरुद्धधर्मवान्, अतोऽशक्यत्वात् ज्ञातुं कस्तं मदामदं देवं मदन्यो ज्ञातुमर्ह-

---

(ப—ரை) *आसीनः=உட்கார்ந்துகொண்டே=சலனமற்றதாக இருந்துகொண்டே (*)दूरम्=வெகுதூரம் व्रजति=செல்லுகிறது. †शयानः=சயனித்துக்கொண்டே ‡सर्वतः=நாலாபக்கத்திலும், याति= செல்லுகிறது. ஆகவே (‡)मदामदम्=மதரூபியும், அமதரூபியும், देवम्=உண்மையில் ஸ்வப்ரகாசனுமான तम्=அந்த ஆத்மாவை मदन्यः=என்னைக்காட்டிலும் வேறுபட்ட कः=எவன்தான் ज्ञातुम्=அறிவதற்கு अर्हति=தகுந்தவனாவான். (21) (எ—று)

பாஷ்யம். — आसीनः=அவஸ்திதனாக = சலனமற்றவனாகவே இருந்துகொண்டு வெகுதூரம் செல்லுகிறான். शयानः=படுத்துக்கொண்டு நாலாபக்கத்திலும் செல்லுகிறான். இவ்விதம் देवः=ஸ்வப்ரகாசனும், समदः=ஸஹர்ஷனும்=சுகாகாரவிருத்திப் பிரகாசகனும், अमदः=அஹர்ஷனும்=துக்காகாரவிருத்திப் பிரகாசகனுமான

---

* ஜாக்கிரத், ஸ்வப்பினம் இவற்றில் மனது முதலியவற்றின் வியாபாரத்துக்கு ஸாக்ஷியாகவிருப்பதுபற்றி கூடஸ்தமாக விருப்பதால் இவ்விதம் சொல்லப்பட்டது.

(*) மனம் முதலியவற்றின் வியாபாரங்கள் விஷயமிருக்குமிடங்களிற் செல்லும்பொழுது அவற்றில் ப்ரதிபிம்பரூபத்தினால் ஆத்மா போவது போலிருக்கிறது என்பதுபொருள்.

† ஸுஷுப்தியில் கரணங்கள் தமதுவேலையற்றனவாக விருப்பதுபற்றி விசேஷவிக்ஞானமில்லாமையால் இவ்விதம் சொல்லப்பட்டது.

‡ விக்ஞப்தி ஸாமான்யரூபத்துடன் இருப்பதால் இவ்விதம் சொல்லப்பட்டது.

(‡) சுகாகாரவிருத்தியில் ப்ரகாசிப்பதால் मदः எனப் படுவதாகவும், துக்காகாரவிருத்தியில் ப்ரகாசிப்பதால் अमदः எனப் படுவதாகவுமாகிறது.

ति। अस्मदादेरेव सूक्ष्मबुद्धेः पण्डितस्य सुविज्ञेयोऽयमात्मा। स्थितिगति नित्यानित्यादिविरुद्धानेकधर्मोपाधिकत्वाद्विरुद्धधर्मवत्त्वाद्विश्वरूप इव चिन्तामणिवदवभासते। अतो दुर्विज्ञेयत्वं दर्शयति—कस्तं मदन्यो ज्ञातुमर्हतीति। करणानामुपशमः शयनम्। करणजनितस्यैकदेशविज्ञानस्योपशमः शयानस्य भवति। यदाचैवं केवलसामान्यविज्ञानत्वात्सर्वतो यातीव, यदा विशेषविज्ञानस्थः स्वेन रूपेण स्थित एव सन्मन आदिगतिषु तदुपाधिकत्वाद्दूरं व्रजतीव। सचेहैव वर्तते ॥ २१ ॥

तद्विज्ञानाच्च शोकात्यय इत्यपि दर्शयति—

---

இந்த ஆத்மா விருத்தமான தர்மமுள்ளவனாக இருக்கிறான். ஆனது பற்றி அறியமுடியாதவனாகவிருப்பதால் மதாமதனும், தேவனுமான அவனை என்னைக்காட்டிலும் வேறு எவன் அறிவதற்கு அர்ஹனாவான். ஸூக்ஷ்மமான புத்தியுள்ளவனும், பண்டிதனுமான நம்போன்றவர்க்கே அறியக்கூடியவனாக இந்த ஆத்மா இருக்கிறான். ஸ்திதி, கதி, நித்யத்வ, அநித்யத்வாதியாகிற விருத்தமான அனேக தர்மங்களை உபாதியாகக் கொண்டிருப்பதிலிருந்து விருத்தமான தர்மமுள்ளவனாகவாவதால் சிந்தாமணிபோல் பலரூபமுள்ளவன் போல தோற்றத்தையடைகிறான். ஆனதுபற்றி "**कस्तं मदन्यो ज्ञातुमर्हति**" என்றதால் அறியமுடியாதவன் என்பதைத் தெரிவிக்கிறார். கரணங்களின் லயமானது ஶயனமெனப்படும். படுத்துறங்குபவனுக்குக் கரணங்களாலுண்டுபண்ணப்பட்ட பரிச்சின்ன விஷயவிக்ஞானமானது சாந்தமாகிவிடுகிறது. எதுபோழ்து இவ்விதம் தனித்த பொதுப்படையான விக்ஞானமுள்ளவனாகவிருப்பதுபற்றி நாலாபக்கத்திலும் செல்லுபவன் போலும், எதுபோழ்து சொந்தஸ்வரூபத்துடனிருப்பவனாய்க்கொண்டே விசேஷ விக்ஞானத்திலிருக்கின்றவனாகவாகிறானோ அப்பொழுது மனம் முதலியவற்றுக்குக் கதியானது இருக்கும்பொழுது மனம் முதலியவற்றை உபாதியாகக் கொண்டிருப்பதால் வெகுதூரம் செல்லுபவன் போலுமாகிறான். (ஆனால்) அவன் இந்த தேஹத்திலேயே தானிருக்கிறான். (21) (எ—று)

அவதாரிகாபாஷ்யம்.—அந்த ஆத்மவிக்ஞானத்தாலேயே சோகநிவிருத்தியேற்படுகிறது என்பதையும் தெரிவிக்கிறார்—

**अशरीरꣳ शरीरेष्वनवस्थेष्ववस्थितम् ।**
**महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति ॥ २२ ॥**

अशरीरम्=स्वेन रूपेणाकाशकल्प आत्मा तमशरीरं शरीरेषु=देवपितृमनुष्यादिशरीरेषु अनवस्थेषु=अवस्थितिरहितेष्वनित्येषु अवस्थितम्, नित्यम्=अविकृतमित्येतत् । महान्तं महत्त्वस्याऽऽपेक्षिकत्वशङ्कायामाह—विभुम्=व्यापिनमात्मानम् । आत्मग्रहणं स्वतोऽनन्यत्वप्रदर्शनार्थम् । आत्मशब्दः प्रत्यगात्मविषय एव मुख्यः । तमीदृशमात्मानं मत्वाऽयमहमिति धीरः=धीमान्न शोचति । नह्येवंविधस्यात्मविदः शोकोपपत्तिः ॥ २२ ॥

---

(ப-ரை) **अशरीरम्**=சொந்த ஸ்வரூபத்தினல் சரீரமற்றவனும், **अनवस्थेषु**=நிலையற்றவைகளான **शरीरेषु**=தேஹங்களில் **अवस्थितम्**=இருப்பவனும், அதாவது:-நித்யனும் **महान्तम्**=எதற்கும் காரணனும், **विभुम्**=எங்கும் நீக்கமற நிறைந்தவனுமான **आत्मानम्**=ஆத்மாவை **मत्वा**=அறிந்துகொண்டு **धीरः**=புத்திமானகவுள்ளவன், **न शोचति**=சோகத்தையடையமாட்டான். (22) (எ-று)

பாஷ்யம்.—சொந்தரூபத்தினல் ஆத்மா ஆகாசத்துக்கொப்பானவனுக இருக்கிருன். ஆகவே அசரீரனும்=சரீரமெதுவுமற்றவனும், **अनवस्थेषु**=நிலைபெருதவைகளான=அநித்யங்களான **शरीरेषु**=தேவர், பிதிருக்கள், மனுஷ்யர் முதலிய சரீரங்களில் **अवस्थितम्**=நித்யனும் அதாவது:-விகாரமற்றவனுமென்றுப். மஹானும் (ஸர்வகாரணனும்) மஹத்வமானது ஆபேக்ஷிகமாக (ஒன்றைமுன்னிட்டேற்பட்டதாக) வேற்படுமோ என்ற சங்கைவரவே **विभुम्**=என்றூர். வியாபியும்=எங்கும் நீக்கமற நிறைந்தவருவான ஆத்மாவை, இங்கு **आत्मानम्**=என்றது இயற்கையில் ஜீவப்ரம்ஹ ஐக்கியத்தைச் சொல்ல வேண்டியேற்பட்டது. **आत्मा**=என்ற சப்தமானது ப்ரத்யகாத்ம விஷயத்திலேயே முக்கியமாகவுள்ளது. (அதாவது:—ப்ரத்யகாத்மாவையே முக்கியமாகச் சொல்லுமென்றும்.) இப்பேற்பட்ட அந்த ஆத்மாவை "இவனே நான்" எனவறிந்துகொண்டு புத்திமானுகவுள்ளவன் சோகத்தை யடையமாட்டான். இத்தகைய ஆத்மவித்துக்குச் சோகமேற்படுவதற்கு இடமில்லையன்றே. (22) (எ-று)

यद्यपि दुर्विज्ञेयोऽयमात्मा तथाप्युपायेन सुविज्ञेय एवेत्याह—

**नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन।**
**यमेवैष वृणुते तेन लभ्यस्तस्यैष आत्मा विवृणुते तनूँ स्वाम्॥**

नायमात्मा प्रवचनेन=अनेकवेदस्वीकरणेन लभ्यः=ज्ञेयः नापि मेधया ग्रन्थार्थधारणशक्त्या। न बहुना श्रुतेन केवलेन। केन तर्हि लभ्य इत्युच्यते—यमेव स्वात्मानमेषः=साधकः, वृणुते=प्रार्थयते तेनैवात्मना वरित्रा स्वयमात्मा लभ्यो ज्ञायत इत्येतत्। निष्कामस्यात्मानमेव प्रार्थयत आत्म-

---

அவதாரிகா பாஷ்யம்.—இந்த ஆத்மாவானவன் அறிதற்கரிதானவன் என்பது உண்மைதானாயினும் உபாயத்தினால் (போதிய ஸாதனத்தினால்) ஸுவிக்ஞேயனாகவே = சுலுவிலறிந்துகொள்ளக் கூடியவனாகவே, ஆகிறான் என உபதேசிக்கிறார்—

(ப—ரை) **अयम्**=இந்த **आत्मा**=ஆத்மாவானவன் **प्रवचनेन**=அனேகம் வேதங்களை ஸ்வீகரித்தலினால் **न लभ्यः**=அறியக்கூடியவனன்று. **मेधया**=கிரந்தத்தின் பொருளைத் தாரணம் செய்யும் சக்தியினாலும் **न (लभ्यः)**=அறியக்கூடியவனன்று. **बहुना**=வெகுவான **श्रुतेन**=கேள்வியினாலும் **न (लभ्यः)**=அறியக்கூடியவனன்று. **एषः**=ஸாதகன்=உத்தமாதிகாரியானவன் **यमेव**=எந்தச் சொந்த ஆத்மாவையே **वृणुते**=ப்ரார்த்திக்கின்றானோ **तेन**=விரும்பும் அந்த ஸாதகனால்=உத்தமாதிகாரியினால் **लभ्यः**=இயற்கையில் அறியக்கூடியவனாகவாகிறான் **तस्य**=ஆத்மவிஷயமான காமனையுள்ளவனுக்கே **एषः**=இந்த **आत्मा**=ஆத்மாவானது **स्वाम्**=சொந்தமான **तनुम्**=யாதாத்ம்யத்தை=உண்மையான ஸ்வரூபத்தை **विवृणुते**=ப்ரகாசப்படுத்துகிறது.

பாஷ்யம்.—இந்த ஆத்மா அனேகம் வேதங்களைச் சொந்தமாக்கிக்கொள்ளுதலாகிற ப்ரவசனத்தினால் அறிந்து கொள்ளக்கூடியவனன்று. கிரந்தத்திற் சொல்லியபொருளைத் தாரணஞ்செய்யும் சக்தியினாலும் அறிந்து கொள்ளக்கூடியவனன்று. கேவலமான=குருபதேசமற்றதான வெகுவிதஶ்ரவணத்தினாலும் அறிந்துகொள்ளக் கூடியவனன்று. அப்படியானால் எதனால் அறிந்துகொள்ளக் கூடியவன் எனின்? சொல்லப்படுகிறது. இந்த ஸாதகன்=உத்தமாதிகாரியானவன், எந்தச் சொந்தப்ரத்யகாத்மாவையே **वृणुते** =

नैवात्मा लभ्यत इत्यर्थः। कथं लभ्यत इति? उच्यते। तस्य=आत्मकामस्य एषः=आत्मा विवृणुते=प्रकाशयति पारमार्थिकीं तनूं स्वाम्=स्वकीयां स्वयाथात्म्यमित्यर्थः॥ २३॥ किञ्चान्यत्—

**नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहितः।**
**नाशान्तमानसो वापि प्रज्ञानेनैनमाप्नुयात्॥ २४॥**

---

ப்ரார்த்திக்கிருனே, *तेन=ப்ரார்த்திக்கும் அந்த ஆத்மாவினுலேயே சொந்த ஆத்மாவானது அறியக் கூடியதாகவாகிறது என்பது கருத்து. நிஷ்காபனும்=வேறுபொருளில் காபனையற்றவனும், ஆத்மாவையே= தனது ப்ரத்யகாத்மாவையே, ப்ரார்த்திப்பவனுமானவனுக்கு ஆத்மாவினுலேயே=தனதியற்கையினுலேயே, ஆத்மாவானது அறியக்கூடியதாகவாகிறது என்பது பொருள். எவ்விதம் அறியப்படுகிறது எனின்? சொல்லப்படுகிறது. तस्य=ஆத்மகாமனையுள்ளவனுக்கு இந்த ஆத்மாவானது சொந்தமான பாரமார்த்திகசரீரத்தை=(அதாவது:=தன்து உண்மையான நிலையை என்றுபொருள்.) ப்ரகாசப்படுத்துகிறது. (23) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—மேலுமொன்றுண்டு—

(ப—ரை) दुश्चरितात्=விலக்கப்பட்டதும் ஶ்ருதிஸ்மிருதிகளில் விதிக்கப்படாததுமான பாபகர்மங்களிலிருந்து अविरतः=ஒய்வையடையாதவன் एनम्=இந்த ஆத்மாவை नाप्नुयात्=அடையமாட்டான். अशान्तः=இந்திரிய சாபல்யத்தினின்றும் விடுபடாதவனும் एनम्= இந்த ஆத்மாவை न=அடையமாட்டான். असमाहितः=மனத்தை ஒருமுகப்படுத்தாதவனும், न=இந்த ஆத்மாவை அடையமாட்டான். अशान्तमानसोवापि=ஸமாதிமூலமுண்டாகும் பலனில் ஆவல்கொண்டு அதனுல் மனதடக்கமற்றவனும் கூட இந்த ஆத்மாவை அடையமாட்டான். பின்னையோவெனில் प्रज्ञानेन=ப்ரமஹக்ஞான மொன்றினுலேயே एनम्=இந்த ஆத்மாவை आप्नुयात्=அடைவான். (24)

பாஷ்யம் — दुश्चरितात्=விலக்கப்பட்ட அதாவது:—சுருதிஸ்மிருதிகளில விதிக்கப்படாத பாபகர்மத்தினின்றும் ஒய்வையடையாத

---

* तेन=स्वव्यतिरिक्तविषयकप्रार्थनाशून्येन इत्यर्थः அதாவது:—தன்னைவிட வேறுபட்டவிஷயத்தில் ஆவலற்றவனுல் என்பது பொருள்.

न दुश्चरितात्=प्रतिषिद्धाच्छ्रुतिस्मृत्यविहितात्पापकर्मणोऽविरतः=अनुपरतः। नापीन्द्रियलौल्यादशान्तः=अनुपरतः। नाप्यसमाहितः=अनेकाग्रमना विक्षिप्तचित्तः। समाहितचित्तोऽपि सन् समाधानफलार्थित्वान्नाप्यशान्तमानसः=व्यापृतचित्तः। प्रज्ञानेन=ब्रह्मविज्ञानेन, एनम्=प्रकृतमात्मानमाप्नुयात्। यस्तु दुश्चरिताद्विरत इन्द्रियलौल्याच्च समाहितचित्तस्समाधानफलादप्युपशान्तमानसश्चाचार्यवान् प्रज्ञानेन यथोक्तमात्मानं प्राप्नोतीत्यर्थः॥ २४॥

**यस्य ब्रह्म च क्षत्त्रं च उभे भवत ओदनः।**
**मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः॥ २५॥**

इति काठकोपनिषदि प्रथमाध्याये द्वितीया वल्ली समाप्ता॥

---

வனும் **न**=அடையான். இந்திரியசாஞ்சல்யத்தினின்றும் சாந்தனாக இல்லாதவனும், அதாவது:-ஓய்வையடையாதவனும், **न**=அடையான். ஏகாக்ரமான மனத்தை யடையாதவனும் = அதாவது:—விக்ஷிப்த மான சித்தமுள்ளவனும் **न** = அடையான். ஸமாஹிதசித்தனாக= ஒரே இடத்தில் நெருத்தப்பட்ட மனத்தையுடையவனாக, இருந்த போதிலுங்கூட ஸமாதியின் பலனிலாசையுள்ளவனாக இருக்கக்கூடு மானதால் அசாந்தமான மனதுள்ளவனாக = வெளிவியாபாரத்தில் நொக்குள்ள மனதுள்ளவனாகவாகலாம். ஆகவே இவனும் இதை யடையான். ப்ரம்ஹஜ்ஞானத்தினாலேயே இந்த ப்ரக்ருதமான ஆத்மாவை அடைவான். அதாது:—எவன் பாபகர்மத்தினின்றும் இந்திரிய சாஞ்சல்யத்தினின்றும் ஓய்வையடைந்தவனோ, எவன் ஸமாஹிதமான சித்தமுள்ளவனோ, எவன் ஸமாதிமூலமுண்டாகும் பலத்தினின்றுங்கூட ஓய்ந்தமனதுள்ளவனும் சிறந்த ஆசாரியனை யடைந்தவனுமோ அவன் ப்ரம்ஹக்ஞானத்தினால் இதுவரை சொல்லப்பட்ட ஆத்மாவை யடைகிறான் என்பது பொருள். (24)

(ப—ரை) **यस्य**=எவருக்கு **ब्रह्म च**=ப்ராம்ஹணஜாதியும், **क्षत्रञ्च**=க்ஷத்திரியஜாதியும் என்ற **उभे**=இவ்விரண்டும் அதாவது:—ப்ரம்ஹ க்ஷத்ரங்களை உபலக்ஷணமாகக்கொண்ட ஸகலப்ரபஞ்சமும் என்றும். **ओदनः**=அன்னமாக = அழிக்கக் கூடியதாக = விநாஶ்யமாக

यस्त्वनेवं भूतो यस्य=आत्मनः, ब्रह्मक्षत्रे सर्वधर्मविधारके अपि सर्वत्राणभूते उभे, ओदनः=अशनं भवतः=स्याताम्। सर्वहरोऽपि मृत्युर्यस्योपसेचनमेवौदनस्य, अशनत्वेऽप्यपर्याप्तस्तं प्राकृतबुद्धिर्यथोक्तसाधनरहितः सन् क इत्था=इत्थमेवं यथोक्तसाधनवानिवेत्यर्थः। वेद विजानाति यत्र स आत्मेति ॥ २५ ॥

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्य गोविन्दभगवत्पूज्यपादशिष्य श्रीमदाचार्य श्रीशङ्करभगवतः कृतौ काठकोपनिषद्भाष्ये प्रथमाध्याये द्वितीयवल्लीभाष्यं समाप्तम् ॥



---

भवतः=ஆகின்றனவோ, यस्य=எவருக்கு मृत्युः=யமன் उपसेचनम्=(*) ஊருகாயாகவாகின்றானோ அதாவது:—யமன் ஸர்வஸம்ஹாரத்துக்கும் ஸாதனமாக இருந்தபோதிலுங்கூட முடிவில் தானும் எவரால் நாசமாக்கப்படுகின்றானோ என்று பொருள். सः=அத்தகைய ஸகுணஸ்வரூபமானது यत्र=எந்த நிர்க்குணஸ்வரூபத்தில் கல்பிதமோ (तम्=அந்த நிர்க்குண ஆத்மாவை) इत्था=இவ்விதமென कः=எவன்தான் (முற்கூறிய சிறந்த ஸாதனஸமூஹங்களற்ற எவன்தான்) वेद=அறிவான் அதாவது:—அறிவுகருவிகளான ஸர்வப்ரமாணங்களுக்கும் அது ப்ரகாசகமாக வாவதுபற்றி எதற்கும் அது விஷயமாகவாகாததால் எந்த இந்திரியங்களாலும் அறியப்படாத நிலையில் அது இருக்கிறது என்பது இதனுலுபதேசிக்கப்பட்டது.

பாஷ்யம்.—எந்த ஆத்மாவுக்கு ஸர்வதர்மங்களையும் காக்கின்றவர்களும், ஸர்வத்துக்கும் ரக்ஷகர்களுமான ப்ராம்ஹண க்ஷத்திரியர்களென்ற இருவரும் ஓதனமாக = ஆஹாரமாகவாகின்றனரோ, ஸர்வஹரனுனமிருத்யுவுங்கூட எவருடைய ஓதனத்துக்கு உபஸேசனமே யொழிய=ஊருகாயேயொழிய, ஆஹாரத்துக்குக்கூட போ

---

(*) ஆஹாராதிகளைச் சாப்பிடுவதற்கு ஊருகாய் உதவியாயிருந்தபோதிலும் முடிவில் அதுவும் சாப்பிடப்படுவதுபோல மிருத்யுஸர்வஸம்ஹாரத்துக்கும் உதவியாக இருந்தபோதிலும் முடிவில் மிருத்யுவையும் எவர் அழித்துவிடுகிறாரோ என்பது பொருள். இதனுல் ஸர்வஸம்ஹாரகமான ஸகுணஸ்வரூபம் சொல்லப்பட்டதாகவாகிறது.

## प्रथमाध्याये तृतीया वल्ली प्रारभ्यते ॥

ऋतं पिबन्तावित्यस्या वल्ल्यास्सम्बन्धः। विद्याविद्ये नाना, विरुद्धफले इत्युपन्यस्ते, न तु सफले ते यथावन्निर्णीते। तन्निर्णयार्था रथरूपककल्पना। तथाच प्रतिपत्तिसौकर्यम्। एवं च प्राप्तृप्राप्यगन्तृगन्तव्यविवेकार्थं द्वावात्मानावुपन्यस्येते—

---

தாதவனோ அந்த அத்தா எதிலிருக்கிறுரோ அதாவது:—எதில் அத்யஸ்தரோ அதை எவன் முன்சொன்னபடியில்லாதவனோ அதாவது:—ப்ராகிருத புத்தியுள்ளவனும், இதுவரை சொல்லப்பட்டபடிக்கான ஸாதனங்களற்றவனுமோ அவன் அவ்விதமிருந்துகொண்டு இவ்விதம் சொல்லப்பட்டபடிக்கான ஸாதனமுள்ளவன்போல, எவ்விதம் அறிவான். (25) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரிய கோவிந்த
பகவத்பூஜ்யபாத சிஷ்யரான ஸ்ரீமதாசார்ய சங்கரபகவத்
பாதரின் கிருதியான காடகோபநிஷத்பாஷ்யத்தில்
முதலாவது அத்தியாயத்தில் இரண்டாவது
வல்லியின் பாஷ்யம் முற்றிற்று.



## மூன்றுவது வல்லீ.

அவதாரிகா பாஷ்யம்.—"ருதம் பிபந்தௌ" என்ற வல்லிக்கு முந்தினவல்லிகளுடன் ஸம்பந்தம் சொல்லப்படுகிறது வித்யை அவித்யை இரண்டும் (ஸ்வரூபத்தில்) வேறுபட்டன என்றும், ஒன்றுக்கொன்று நேர்மாறுன பலனுள்ளன்வென்றும் சொல்லப்பட்டனவே யொழிய பலனுடன்கூடின அவைகள் உள்ளபடி நிர்ணயிக்கப்படவில்லை. அவற்றை நிர்ணயிக்கவேண்டியே சரீரத்துக்கு ரத (தேர்) ரூபகமானது கல்பிக்கப்படுகிறது. அவ்விதம் செய்வதால் அறிந்துகொள்ள ஸௌகரியமேற்படுகிறது. ஆகவே ப்ராப்தாவும் ப்ராப்யமும், கந்தாவும் கந்தவ்யமுமாகியவற்றைப் பகுத்தறிய வேண்டி இரண்டு ஆத்மாக்கள் உபதேசிக்கப்படுகின்றன—

ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्ध्ये ।
छायातपौ ब्रह्मविदो वदन्ति पञ्चाग्नयो ये च त्रिणाचिकेताः ॥

ऋतम्=सत्यमवश्यंभावित्वात्कर्मफलं पिबन्तौ। एकस्तत्र कर्मफलं पिबति भुङ्क्ते नेतरः, तथापि पातृसंबन्धात्पिबन्तावित्युच्यते छत्रिन्यायेन। सुकृतस्य स्वयं कृतस्य कर्मण ऋतमिति पूर्वेण संबन्धः। लोके=अस्मिन

---

(ப-ரை) सुकृतस्य=தன்னால் செய்யப்பட்ட கர்மத்தினுடைய ऋतम्=அவஶ்யம் வந்தேதீருவதுபற்றி ஸத்தியமானபலனை. पिबन्तौ=அனுபவிக்கின்றவர்களும், लोके=சரீரத்திலுள்ளதும் परमे=பாஹ்யசரீரத்திலுள்ள ஆகாசத்தைக்காட்டிலும் மேம்பட்டதும், परार्ध्ये=பரப்ரம்ஹத்தினுடைய ஸ்தானத்துக்கு யோக்கியமானதுமான ஹிருதயாகாசத்திலுள்ள गुहाम्=புத்தியில், प्रविष्टौ=ப்ரவேசித்தவர்களும், छायातपौ=நிழலும் வெய்யிலும் போல ஒன்றுக்கொன்று மாறுபட்ட லக்ஷணம் வாய்ந்தவர்களுமான (तौ=அந்த ஆத்மாக்களை) ब्रह्मविदः=ப்ரம்ஹக்ஞானமுள்ளவர்களும் त्रिणाचिकेताः=மூன்றுதடவை நாசிகேதாக்னிசயனஞ்செய்தவர்களும் पञ्चाग्नयः=†ஐந்து அக்னியுள்ளவர்களுமான கிருஹஸ்தர்கள் ये=எவர்களோ (ते=அவர்களும்) वदन्ति=சொல்லுகின்றனர். (1) (எ-று)

பாஷ்யம்.—ऋतम्=அவஶ்யம் வந்தே தீருவதுபற்றி கர்மபலன் ஸத்தியமாகவாகிறது. அத்தகைய கர்மபலனை அனுபவிக்கின்றவர்களும், ஒருவன் கர்மபலனையனுபவிக்கிறான் மற்றவனில்லையாயினுங்கூட பானஞ்செய்பவனுடன் ஸம்பந்தமிருப்பதன் மூலம் ‡சத்ரிநியாயத்தையொட்டி இருவரும் பானஞ்செய்கின்றனரென்று சொல்லப்பட்டது. सुकृतस्य = தன்னாற்செய்யப்பட்ட கர்மத்தினுடைய ருதத்தை என முன்னுள்ள ऋतम्=என்ற பதத்துடன் சேர்த்துப்

---

† கார்ஹபத்யம், ஆஹவனீயம், தக்ஷிணாக்னி, ஸப்யம், ஆவஸத்யம் என அக்னிகள் ஐந்துகளாகும்.

‡ ஒரு கூட்டத்தில் ஒருவன் மட்டும் குடை பிடித்துக்கொண்டு சென்றபோதிலும் छत्रिणो गच्छन्ति=குடையுள்ளவர்கள் செல்லுகின்றனர் என்பதாய் குடையில்லாதவர்களையும் குடையுள்ளவர்களாகச் சொல்லுகிறோம். இதுவே சத்ரி நியாயமெனப்படும்.

शरीरे। गुहाम्=गुहायां बुद्धौ प्रविष्टौ, परमे=बाह्यपुरुषाकाशसंस्थानापेक्षया परमम्। परस्य=ब्रह्मणः अर्धं स्थानं परार्ध्यम्। तस्मिन्हि परं ब्रह्मोपलभ्यते। अतस्तस्मिन् परमे परार्ध्ये हार्दाकाशे प्रविष्टावित्यर्थः। तौ च छायातपाविव विलक्षणौ संसारित्वासंसारित्वेन ब्रह्मविदो वदन्ति कथयन्ति। न केवलमकर्मिण एव वदन्ति। पञ्चाग्नयो गृहस्थाः। ये च त्रिणाचिकेताः। त्रिः नाचिकेतोऽग्निश्चितो यैस्ते त्रिणाचिकेताः॥ १ ॥

**यः सेतुरीजानानामक्षरं ब्रह्म यत्परम्।**
**अभयं तितीर्षतां पारं नाचिकेतꣳशकेमहि ॥ २ ॥**

---

பொருள் கொள்ளவும். **लोके**=இந்தச் சரீரத்தில் **गुहाम्**=குஹையில் புத்தியில் ப்ரவேசித்தவர்களும் **परमे**=வெளியிலுள்ள சரீரத்திலிருக்கின்ற ஆகாசத்தையபேக்ஷித்து மேலானதும், **परार्ध्ये**=பரமான ப்ரம்ஹத்தினுடைய ஸ்தானத்துக்கு அர்ஹமுமானதும் (என்று பொருள்.) அதிலன்றோ பரப்ப்ரம்ஹமானது அறியப்படுகிறது. ஆனதுபற்றி அந்தப்பரமமும், பரார்த்யமுமான ஹிருதயாகாசத்தில் ப்ரவேசித்தவர்கள் என்பது பொருள். ஒருவன் ஸம்ஸாரியாகவும் மற்றவன் அஸம்ஸாரியாகவுமிருப்பதன் மூலம் அவர்களை நிழலும் வெய்யிலும்போல ஒருவருக்கொருவர் மாறுபட்ட ஸ்வரூபமுள்ளவர்களென ப்ரம்ஹவித்துக்கள் சொல்லுகின்றனர். கர்மமற்றவர்கள் மட்டும் தான் சொல்லுகின்றனர் என்பதில்லை. **पञ्चाग्नयः**=கிருஹஸ்தர்களும் சொல்லுகின்றனர். அதாவது:—**येत्रिणाचिकेताः**=எவர்களால் நாசிகேதாக்னிசயனமானது மூன்றுதடவை செய்யப்பட்டதோ அந்த கிருஹஸ்தர்களும் என்றும். (1) (எ—று)

(ப—ரை) **यः**=எந்த அக்னியானது **ईजानानाम्**=யாகஞ்செய்யும் கர்மடர்களுக்கு **सेतुः**=துக்கத்தைக் கடக்கச் செய்வதுபற்றி ஸேது (அணை) போலவாகிறதோ **तम्**=அந்த **नाचिकेतम्**=நாசிகேதாக்னியை (**ज्ञातुं चेतुञ्च**=உபாஸிப்பதற்கும், சயனஞ்செய்வதற்கும்) **शकेमहि**=சக்தர்களாவோம். மேலும், **अभयम्**=பயசூன்யமான **पारम्**=ஸம்ஸாரத்தின் கரையை **तितीर्षताम्**=கடக்கவெண்ணமுள்ளவர்களுக்கு= அதாவது:—ப்ரம்ஹவித்துக்களுக்கு **अक्षरम्**=அக்ஷரமான **यत्**=எந்த

यः सेतुरिव सेतुरीजानानां यजमानानां कर्मिणां दुःखसन्तरणार्थत्वान्नाचिकेताग्निस्तं वयं ज्ञातुं चेतुं च शकेमहि शक्नुवन्तः। किञ्च, यच्चाभयं भयशून्यं संसारपारं तितीर्षतां तर्तुमिच्छतां ब्रह्मविदां यत्परमाश्रयमक्षरमात्माख्यं ब्रह्म तच्च ज्ञातुं शकेमहि शक्नुवन्तः। परापरे ब्रह्मणी कर्मब्रह्मविदाश्रये वेदितव्ये इति वाक्यार्थः। एतयोरेव ह्युपन्यासः कृत ऋतं पिबन्ताविति ॥

**आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव तु।**
**बुद्धिं तु सारथिं विद्धि मनः प्रग्रहमेव च॥ ३ ॥**

---

**ब्रह्म**=ப்ரம்ஹமானது **परम्**=ஆஶ்ரயமானதோ **तत्**=அதை **ज्ञातुम्**=அறிவதற்கும் **शकेमहि**=சக்தர்களாவோம். (2) (எ—று)

பாஷ்யம்.—எந்த அக்னியானது ஸேதுபோலுள்ள ஸேதுவாக ஈஜானர்களுக்கு=யஜமானர்களுக்கு=கர்மிகளுக்கு துக்கஸந்தரணப் செய்துவைப்பதன் மூலமாகிறதோ அந்த நாசிகேதாக்னியை நாம் உபாஸிப்பதற்கும், சயனஞ்செய்வதற்கும் சக்தர்களாகவாகின்றோம். மேலும், எது பயசூன்யமானதோ, ஸம்ஸாரபாரத்தைத் தாண்டவிருப்பமுள்ள ப்ரம்ஹவித்துக்களுக்கு அக்ஷரமும் ஆத்மாவெனப் பெயருள்ளதுமான எந்த ப்ரம்ஹமானது ஆஶ்ரயமோ அதை அறிவதற்கும் நாம் சக்தர்களாகின்றோம். கர்ம ப்ரம்ஹவித்துக்களுக்கு ஆஶ்ரயமான பராபர ப்ரம்ஹங்கள் வேதிதவ்யங்கள் அதாவது: உபாஸிக்கவும் அறியவும் தக்தன என்பது வாக்கியார்த்தம். இந்தப் பராபர ப்ரம்ஹத்தைப்பற்றிய உபன்னியாஸமே யன்றோ **ऋतं पिबन्तौ** என்றவிடத்தில் செய்யப்பட்டது. (2) (எ—று)

(ப—ரை) **आत्मानम्**=ஸம்ஸாரியான ஜீவனை, **रथिनम्**=தேருக்கு ஸ்வாமியாக **विद्धि** = அறிந்துகொள்ளு. **शरीरंतु**=தேஹத்தையோ **रथमेव**=தேராகவே (**विद्धि**=அறிந்துகொள்ளு) **बुद्धिन्तु**=நிஶ்சயாத்மகமான புத்தியையோ, **सारथिम्**=தேர்ப்பாகனாகவும், **मनः**=மனஸ்ஸை, **प्रग्रहमेव**=கடிவாளமாகவுமே, **विद्धि**=அறிந்து கொள்ளு (3) (எ—று)

பாஷ்யம்.—அந்த ஜீவாத்ம பராமாத்மாக்களுக்குள் உபாதியினால் செய்யப்பட்டவனும், மோக்ஷத்தையடையவேண்டியும் ஸம்

तत्र य उपाधिकृतः संसारी विद्याविद्ययोरधिकृतो मोक्षगमनाय संसारगमनाय च तस्य तदुभयगमने साधनो रथः कल्प्यते। तत्र तमात्मान मृतपं संसारिणं रथिनम्=रथस्वामिनं विद्धि=जानीहि। शरीरं रथमेव तु रथबद्धहयस्थानीयैरिन्द्रियैराकृष्यमाणत्वाच्छरीरस्य। बुद्धिं तु अध्यवसायलक्षणां सारथिं विद्धि बुद्धिनेतृप्रधानत्वाच्छरीरस्य। सारथिनेतृप्रधान इव रथः। सर्वं हि देहगतं कार्यं बुद्धिकर्तव्यमेव प्रायेण। मनः=सङ्कल्पविकल्पादिलक्षणं प्रग्रहम्=रशनां विद्धि। मनसा हि प्रगृहीतानि श्रोत्रादीनि करणानि प्रवर्तन्ते रशनयेवाश्वाः॥ ३॥

इन्द्रियाणि हयानाहुर्विषयांस्तेषु गोचरान्।
आत्मेन्द्रियमनोयुक्तं भोक्तेत्याहुर्मनीषिणः॥ ४॥

---

ஸாரத்தையடையவேண்டியும் வித்யை அவித்யை இவற்றில் அதிகாரம் பெற்றவனுமான ஸம்ஸாரி எவனே அவனுக்கு அவ்விரண்டையும் அடையும் விஷயத்தில் ஸாதனமாகவுள்ளது தேராகக் கல்பிக்கப்படுகிறது. அந்தத்தேரில் அவஶ்யம் வரக்கூடிய கர்மபலனையனுபவிப்பவனும், ஸம்ஸாரியுமான அந்த ஆத்மாவை ரதியாக=ரதஸ்வாமியாக அறிந்துகொள்ளு. **शरीरं रथमेव तु**=சரீரத்தையே தேராகவே அறிந்துகொள்ளு. தேரானதுபோலக் குதிரை ஸ்தானத்திலுள்ள இந்திரியங்களால் சரீரமானது இழுக்கப்படுவதாலென்க. நிஶ்சயரூபமான புத்தியை ஸாரதியாக அறிந்துகொள்ளு. சரீரமானது புத்தியாகிற நேதாவை (ஓட்டுபவனை) ப்ரதானமாகக் கொண்டிருப்பதாலென்க. தேரானது ஸாரதியாகிற நேதாவை ப்ரதானமாகக் கொண்டிருப்பதுபோலவாம். தேஹத்தைச் சார்ந்துள்ள காரியம் யாவும் பெரும்பாலும் புத்தியினல் செய்யக்கூடியதாகவேயன்றோ இருக்கின்றது. ஸங்கல்ப விகல்பாதிரூபமான மனஸ்ஸை ப்ரக்ரஹமாக=கடிவாளமாக அறிந்துகொள்ளு. கடிவாளத்தினல் குதிரைகள் போல ஶ்ரோத்ராதிகளான கரணங்கள் மனத்தினலே வப்பட்டனவாய்க்கொண்டேயன்றோ ப்ரவிருத்திக்கின்றன (3)

(ப—ரை) **इन्द्रियाणि**=சக்ஷுராதி இந்திரியங்களை, **हयान्**=குதிரைகளாகவும், **तेषु**=குதிரைகளாகக் கல்பிக்கப்பட்ட அவ்விந்திரியங்

इन्द्रियाणि=चक्षुरादीनि, हयानाहू रथकल्पनाकुशला:, शरीररथाकर्षणसामान्यात् । तेष्वेवेन्द्रियेषु हयत्वेन परिकल्पितेषु गोचरान्=मार्गान् रूपादीन्विषयान्विद्धि । आत्मेन्द्रियमनोयुक्तम्=शरीरेन्द्रियमनोभिस्सहितं संयुक्तमात्मानं भोक्तेति=संसारीत्याहुर्मनीषिण:=विवेकिन:। नहि केवलस्यात्मनो भोक्तृत्वमस्ति । बुद्ध्याद्युपाधिकृतमेव तस्य भोक्तृत्वम् । तथाच श्रुत्यन्तरं केवलस्याभोक्तृत्वमेव दर्शयति—'ध्यायतीव लेलायतीव' इत्यादि । एवं च सति वक्ष्यमाणरथकल्पनया वैष्णवस्य पदस्यात्मतया प्रतिपत्तिरुपपद्यते नान्यथा स्वभावानतिक्रमात् ॥ ४ ॥

---

கள் விஷயத்தில் **विषयान्**=ரூபாதி விஷயங்களை **गोचरान्**=மார்க்கங்களாகவும் **आहु:**=சொல்லுகின்றனர். **मनीषिण:**=விவேகிகள் **आत्मेन्द्रियमनोयुक्तम्**=தேஹம் இந்திரியம் மனஸ் இவற்றுடன் கூடினவனான ஆத்மாவை **भोक्तेति**=போக்தா=ஸம்ஸாரி என்றும் **आहु:**=சொல்லுகின்றனர். (4) (எ—று)

பாஷ்யம்.—ரதகல்பனை செய்வதில் ஸமர்த்தர்கள் சக்ஷுராதிகளான இந்திரியங்களைக் குதிரைகளாகச் சொல்லுகின்றனர். ஏன் சரீரமாகிற தேரை இழுத்தல் ஸமமாக இருப்பதாலென்க. குதிரைகளாகக் கல்பிக்கப்பட்ட அந்த இந்திரியங்கள் விஷயத்தில், ரூபாதி விஷயங்களை கோசரங்களாக=மார்க்கங்களாக அறிந்துகொள்ளு. **आत्मेन्द्रियमनोयुक्तम्**=சரீரேந்திரிய மனஸ்ஸுகளுடன் கூடின ஆத்மாவைப் போக்தாவாக=ஸம்ஸாரியாக **मनीषिण:**=விவேகிகள் சொல்லுகின்றனர். கேவலனான (தனித்த) ஆத்மாவுக்குப் போக்த்ருத்வமில்லையன்றோ. புத்தியாதிகளாகிற உபாதிகளினால்செய்யப்பட்டதாகவன்றோ அவனுடைய போக்திருத்வமானது இருக்கிறது. அவ்விதமே வேறு ஶ்ருதியும் "**ध्यायतीव लेलायतीव** புத்தி தியானிக்குங்கால் இவனும் தியானிப்பவன் போலும், புத்தியானது சலிக்குங்கால் இவனும் சலிப்பவன் போலும் ஆகிறான்" என்றதாதியால் தனித்த ஆத்மாவுக்குப் போக்திருத்வமில்லையென்பதைத் தெரிவிக்கிறது. போக்திருத்வமானது உபாதிமூலம் ஏற்படுகிறது என்று சொன்னதால் தான் (**विज्ञानसारथिर्यस्तु**= என்றதாதியால்) பின்னர் சொல்லப்படும் ரதகல்பனமூலம் வைஷ்ண

**यस्त्वविज्ञानवान् भवत्ययुक्तेन मनसा सदा ।**
**तस्येन्द्रियाण्यवश्यानि दुष्टाश्वा इव सारथेः ॥ ५ ॥**

तत्रैवं सति यस्तु=बुद्ध्याख्यः सारथिः, अविज्ञानवान्=अनिपुणोऽविवेकी प्रवृत्तौ च निवृत्तौ भवति यथेतरो रथचर्यायामयुक्तेन=अप्रगृहीतेनाऽसमाहितेन मनसा प्रग्रहस्थानीयेन सदा युक्तो भवति तस्याकुशलस्य बुद्धिसारथेरिन्द्रियाण्यश्वस्थानीयानि, अवश्यानि=अशक्यनिवारणानि दुष्टाश्वाः=अदान्ताश्वाः इवेतरसारथेर्भवन्ति ॥ ५ ॥

---

வமான பதத்துக்கு ஆத்மத்வரூபமான க்ஞானமானது பொருந்தக் கூடியதாக வாக்யமேயொழிய வேறுவிதமாகச் சொன்னால் பொருந்தாது. ஸ்வபாவத்துக்கு மாறுபாடு ஏற்படாததே அதன் காரணமாகும். (4) (எ—று)

(ப—ரை) **यस्तु**=புத்தியெனப்பெயரிய எந்த ஸாரதியானவன் **अविज्ञानवान्**=ப்ரவிருத்தியிலோ, நிவிருத்தியிலோ விவேகமற்றவனாக வாகி **अयुक्तेन**=தேரைபோட்டுவதில் ப்ரவிருத்திக்காத **मनसा**=கடிவாள ஸ்தானத்திலுள்ள மனஸ்ஸுடன் **सदा**=எப்பொழுதும் கூடினவனாக **भवति**=ஆகிறானோ **तस्य**=அந்த அஸமர்த்தனான புத்தியாகிற ஸாரதிக்கு, **सारथेः**=உலகிலுள்ள தேர்ப்பாகனுக்கு **दुष्टाश्वा इव**=அடங்காக் குதிரைகள்போல **इन्द्रियाणि**=இந்திரியங்களாகிற குதிரைகள் **अवश्यानि**=அடக்க முடியாதனவாகவாகின்றன. (5) (எ—று)

பாஷ்யம்.—அந்த ஸம்ஸாரித்வமானது இயற்கையில்லாததாக விருக்குங்கால் புத்தியெனப்பெயரிய எந்த ஸாரதியானவன் மற்ற ஸாரதிபோல விக்ஞானமற்றவனாக=அநிபுணனாக=ப்ரவிருத்தியிலோ, நிவிருத்தியிலோ விவேகமற்றவனாகவாகிறானோ, சரீரமாகிற தேரைபோட்டுவதில் செலுத்தப்படாததும் = அடக்கப்படாததும் = ஓரேயிடத்தில் நிறுத்தப்படாததுமான கடிவாள ஸ்தானத்திலுள்ள மனத்துடன் எப்பொழுதும் கூடினவனாகவாகிறானோ அஸமர்த்தனான புத்தியாகிற அந்த ஸாரதிக்கு உலகிலுள்ள வேறு ஸாரதிக்கு அடங்காக் குதிரைகள் போல குதிரைஸ்தானத்திலுள்ள இந்திரியங்கள் வசப்படாதனவாக=நிவிருத்தி செய்யமுடியாதனவாக வாகின்றன. (5)

**यस्तु विज्ञानवान् भवति युक्तेन मनसा सदा ।**
**तस्येन्द्रियाणि वश्यानि सदश्वा इव सारथेः ॥ ६ ॥**

यस्तु पुनः पूर्वोक्तविपरीतः सारथिर्भवति विज्ञानवान् प्रगृहीतमनाः समाहितचित्तः सदा तस्याश्वस्थानीयानीन्द्रियाणि प्रवर्तयितुं निवर्तयितुं वा शक्यानि वश्यानि दान्ताः सदश्वा इवेतरसारथेः॥ ६ ॥

तस्य पूर्वोक्तस्याविज्ञानवतो बुद्धिसारथेरिदं फलमाह—

**यस्त्वविज्ञानवान् भवत्यमनस्कः सदाऽशुचिः ।**
**न स तत्पदमाप्नोति संसारं चाधिगच्छति ॥ ७ ॥**

---

(ப—ரை) **यस्तु**=எவன் ***विज्ञानवान्**=இது செய்யத்தக்கது இது செய்யத்தகாதது என்ற விவேகமுள்ளவனாகவும் **सदा**=எப்பொழுதும் **युक्तेन**=யோக யுக்தமான **मनसा**=மனஸ்ஸுடன் கூடினவனாகவும் **भवति**=ஆகிறானோ **सारथेः**=உலகிலுள்ள ஸாரதிக்கு **सदश्वा इव**=நல்ல குதிரைகள் போல **तस्य**=அவனுக்கு **इन्द्रियाणि**=இந்திரியங்கள் **वश्यानि**=வசப்பட்டனவாகவாகின்றன. (6) (எ—று)

பாஷ்யம்.—எவனொருவன் முன்னர் சொன்ன அவிவேக ஸாரதியைக் காட்டிலும் வேறுபட்டவனான ஸாரதியாகவும், விக்ஞானவானாகவும், அடக்கப்பட்ட மனஸ்ஸுள்ளவனாகவும், எப்பொழுதும் ஸமாஹிதசித்தனாகவும் இருக்கின்றானோ அவனுக்கு லோகத்திலுள்ள வேறு ஸாரதிக்கு அடக்கப்பட்ட நல்ல குதிரைகள் போல குதிரை ஸ்தானத்திலுள்ள இந்திரியங்கள் ப்ரவிருத்திக்கும்படி செய்யவோ, நிவிருத்திக்கும்படி செய்யவோ தக்கபடி வஶ்யங்களாகவாகி விடுகின்றன. (6)

அவதாரிகா பாஷ்யம்.—விக்ஞானமற்றவனும், மனோஜயமற்றவனுமான முன்சொன்ன புத்தியாகிற ஸாரதியையுடையவனுக்குப்பின்னர் சொல்லப்படுவதைப்பலனாகச் சொல்லுகிறார்—

(ப—ரை) **यस्तु**=எவன் **अविज्ञानवान्**=விக்ஞானமற்றவனாகவும்,

---

* இது முதலுள்ளவிடங்களிலிருக்கும் விக்ஞான என்ற பதத்துக்கு இது கர்த்தவ்யம், இது அகர்த்தவ்யம் என்பதான விவேகம் எனப்பொருள் கொள்ளவும்.

यस्त्वविज्ञानवान् भवति। अमनस्कः=अप्रगृहीतमनस्कः, स तत एवाशुचिस्सदैव। न स रथी तत्पूर्वोक्तमक्षरं यत्परं पदमाप्नोति तेन सारथिना। नकेवलं कैवल्यं नाप्नोति संसारं च जन्ममरणलक्षणमधिगच्छति॥

यस्तु विज्ञानवान्भवति समनस्कस्सदा शुचिः।
स तु तत्पदमाप्नोति यस्माद्भूयो न जायते॥ ८॥

यस्तु द्वितीयो विज्ञानवान्विज्ञानवत्सारथ्युपेतो रथी विद्वानित्येतत्। युक्तमनाः समनस्कः स तत एव सदा शुचिः, सतु तत्पदमाप्नोति,

---

अमनस्कः=அடக்கப்படாத மனமுள்ளவனுகவும், सदा=எப்பொழுதும் अशुचिः=அசுத்தனுகவும் भवति=இருக்கின்றுனே सः=அவன் तत्=அந்த पदम्=ப்ரம்ஹஸ்வரூபத்தை नाप्नोति=அடையமாட்டான். सः=அவன் संसारञ्च=ஸம்ஸாரத்தையும் अधिगच्छति=அடைகிறுன். (7)

பாஷ்யம்.—எவன் விக்ஞானமற்றவனுகவும் अमनस्कः=அடக்கப்படாத மனதுள்ளவனுகவும் அதனுல் எப்பொழுதுமே அசுத்தனுகவும் இருக்கின்றுனே அந்த ரதிகனுனவன் அந்த=முன்னர் சொல்லப்பட்ட, அக்ஷரரூபமான யாதொரு பரமானபதமுண்டோ அதை அந்த ஸாரதியினுல் அடையமாட்டான். கைவல்யத்தை யடையமாட்டான் என்பது மட்டுமில்லை. ஜனனமரணரூபமான ஸம்ஸாரத்தையுமடைகிறுன். (7) (எ-று)

(ப-ரை) यस्तु=எவன் विज्ञानवान्=விக்ஞானமுள்ள ஸாரதியுடன் கூடினவனுகவும், समनस्कः=யோகயுக்தமான மனதுள்ளவனுகவும், அதனுலேயே सदा = எப்பொழுதும் शुचिः= சுத்தனுகவும், भवति=இருக்கின்றுனே सतु=அவனே यस्मात्=எதனிடமிருந்து भूयः=மறுபடியும் न जायते=ஸம்ஸாரமண்டலத்தில் பிறவியையடைவதில்லையோ तत्=அந்த पदम्=ஸ்வரூபத்தை आप्नोति=அடைகிறுன்.

பாஷ்யம்.—எந்த இரண்டாவது அதிகாரியானவன் विज्ञानवान्=விச்ஞானமுள்ள ஸாரதியுடன் கூடின ரதியானவன்=ஆத்மக்ஞானமுள்ளவன் என்றும். समनस्कः=யோக யுக்தமான மனஸ்ஸுள்ளவனே அவன் அதனுலேயே எப்பொழுதும் சுத்தனுகிறுன். அவனே

यस्मादाप्तात्पदादप्रच्युतः सन्भूयः पुनर्नजायते संसारे ॥ ८ ॥

किन्तत्पदमित्याह—

**विज्ञानसारथिर्यस्तु मनःप्रग्रहवान्नरः ।**
**सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम् ॥ ९ ॥**

विज्ञानसारथिर्यस्तु यो विवेकबुद्धिसारथिः पूर्वोक्तो मनःप्रग्रहवान्–प्रगृहीतमनाः समाहितचित्तःसन् शुचिर्नरो विद्वान् सोऽध्वनः संसारगतेः पारं परमेवाधिगन्तव्यमित्येतत्, आप्नोति=मुच्यते सर्वसंसा-

---

அந்தப் பதத்தையடைகிறான். அடையப்பட்ட எந்தப் பதத்திலிருந்து நழுவாதவனாய்க்கொண்டு திரும்பவும் ஸம்ஸாரத்தில் பிறக்கவேமாட்டானோ அந்தப் பதத்தையடைகிறான் என்றும். (8) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—அந்தப் பதம் யாது? என்பதைச் சொல்லுகிறார்—

(ப—ரை) **विज्ञानसारथिः**—**विज्ञान**=செய்யத்தக்கது இன்னது, செய்யத்தகாதது இன்னது என்ற விவேகத்தையுடைய புத்தியை **सारथिः**=தேர்ப்பாகனாகவுடையவனாகவும், **मनःप्रग्रहवान्**=மனஸ்ஸாகிற கடிவாளத்தையுடையவனாகவும், **यस्तु**=எவன் முன்னர் சொல்லப்பட்டானோ **सः**=அந்த **नरः**=மனிதன், (**यत्**=எந்த ஸ்வரூபமானது) **अध्वनः**=ஸம்ஸாரகதிக்கு **पारम्**=கரையானதோ, (முடிவிடமானதோ) **विष्णोः**=எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ப்ரம்ஹத்தினுடைய **परमम्**=சிறந்த **तत्**=அந்த **पदम्**=ஸ்வரூபத்தை **प्राप्नोति**=அடைகிறான். அதாவது:—இதுவரையடையாதிருந்தோம் என்ற ப்ரமத்தைப் போக்கிக் கொள்ளுகிறான் என்றும். (9) (எ—று)

பாஷ்யம்.—**विज्ञानसारथिर्यस्तु**=எவன் பகுத்தறிவுள்ள புத்தியை ஸாரதியாகவுடையவனாகவும், முன்னர் கூறப்பட்ட மனஸ்ஸாகிற கடிவாளமுள்ளவனாகவும், அதாவது:—தன் வ்சமாக்கப்பட்ட மனதுள்ளவனாகவும், ஸமாஹிதசித்தனாகவும், ஸாதுவாகவும், சுத்தனாகவும் இருப்பவனோ அந்த நரன்=வித்வான், ஸம்ஸாரகதிக்குப் பாரமானதை அதாவது:—அறியத்தகுந்த பரமாத்மாவையே என்றும். அடைகிறான்=ஸம்ஸார பந்தனங்களினால் விடுபடுகிறான். இந்த வித்வான் எதையடைகிறானோ அது விஷ்ணுவும்=வியாபக

रवन्धनैः। तद्विष्णोर्व्यापनशीलस्य ब्रह्मणः परमात्मनो वासुदेवाख्यस्य परमम्=प्रकृष्टं पदम्=स्थानम्, सतत्त्वमित्येतद्यदसावाप्नोति विद्वान् ॥ ९ ॥

अधुना यत्पदं गन्तव्यं तस्येन्द्रियाणि स्थूलान्यारभ्य सूक्ष्मतारतम्यक्रमेण प्रत्यगात्मतयाधिगमः कर्तव्य इत्येवमर्थमिदमारभ्यते—

**इन्द्रियेभ्यः (*)परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः ।**
**मनसस्तु परा बुद्धिर्बुद्धेरात्मा महान्परः ॥ १० ॥**

---

சீலமும், பரமாத்மாவும், வாஸுதேவன் என்ற பெயரையுடையது மான ப்ரம்ஹத்தினுடைய பரமம்=ப்ரகிருஷ்டமான பதமாக=ஸ்தான மாக=*ஸ்வரூபமாகவாகும் என்றும். (9) (எ–று)

அவதாரிகா பாஷ்யம்.—எந்தப் பதமானது கந்தவ்யமோ அந் தப் பதத்தை ஸ்தூலங்களான இந்திரியங்கள் தொடங்கி சூக்ஷ்மமான வற்றின் தாரதம்மியக்கிரமத்தையொட்டி ப்ரத்யகாத்ம ஸ்வரூபமாக அறிந்து கொள்ள வேண்டும் என்ற இதை விளக்கவேண்டி இந்த மேலுள்ள ப்ரகரணமானது இதுபோழ்து ஆரம்பிக்கப்படுகிறது—

(ப–ரை) इन्द्रियेभ्यः=ஸ்தூலங்களும்=மூர்த்தங்களும், காரியங்க ளும், அதிக தேசவியாபகங்களாக இல்லாதவைகளுமான இந்திரியங் களைக் காட்டிலும், अर्थाः=இந்திரியாரம்பகங்களான=இந்திரிய கார ணங்களான பூதசூக்ஷ்மங்கள், पराः हि=சூக்ஷ்மங்களும்=அமூர்த்தங் களும், வியாபகங்களும்=அதிகதேசத்திலிருப்பவைகளும், அழிவற்ற

---

* பாஷ்யத்திலுள்ள सतत्त्वम्=என்ற பதத்துக்கு ஸ்வரூபம் என் பது பொருள்.

(*) பொதுவாய்க் காரணகாரியத்தன்மை இருக்குமிடத்தில் காரிய மானபொருள் காரணத்தைவிட ஸ்தூலமாகவும், பரிச்சின்னமாகவும், இருப்பதைக் காண்கிறோம். காரணமானபொருளோ காரியத்தைக் காட்டிலும் சூக்ஷ்மமாக–(அமூர்த்தமாக) வும், காரியமான பொருளைவிட அதிகதேசவியாபகமாகவும், காரியமானபொருள் போல அழியாத– தாகவும் இருப்பதைக் காண்கிறோம். ஆகவே மந்திரத்திலுள்ள पराः=என்றதால் சூக்ஷ்மத்வம், வியாபகத்வம், அநபாயித்வரூபமான ப்ரத்யகாத்மத்வம் ஆகிற தர்மங்களுள்ள காரணப்பொருள் சொல்லப்– பட்டதாகக் கொள்ளவேண்டும்.

महतः परमव्यक्तमव्यक्तात्पुरुषः परः ।
पुरुषान्न परं किञ्चित्सा काष्ठा सा परा गतिः ॥ ११ ॥

स्थूलानि तावदिन्द्रियाणि, तानि यैरर्थैरात्मप्रकाशनायारब्धानि तेभ्य इन्द्रियेभ्यस्स्वकार्येभ्यः ते पराह्यर्थाः सूक्ष्मा महान्तश्च प्रत्यगात्मभूताश्च

---

வைகளுமாகவன்றோ இருக்கின்றன. அந்த अर्थेभ्यः=இந்திரியகாரணங்களான பூதசூக்ஷ்மங்களைக் காட்டிலும், मनः=மனஸ்ஸானது= மனஸ்ஸுக்குக் காரணமான பூதசூக்ஷ்மமானது, परश्च=சூக்ஷ்மமாகவும், வியாபகமாகவும், அநபாயியாக (அழியாததாக) வும் இருக்கிறது. बुद्धिस्तु=புத்தியாரம்பக (புத்திக்குக்காரண) மான பூதசூக்ஷ்மமோ मनसः=மனத்துக்குக் காரணமான பூதசூக்ஷ்மத்தைக்காட்டிலும், परा=சூக்ஷ்மதமமாகவும், வியாபகமாகவும், அழியாததாகவும் இருக்கிறது. महान् आत्मा=ஹைரண்யகர்ப்ப தத்துவரூபமானதும், ஸர்வ ப்ராணிகளின் புத்திகளும் அழிந்தபோதிலுகூட தான் அழியாததும், எல்லாவற்றுக்கும் வியாபகமாகவானதும், அவ்யக்தத்தினிடமிருந்து முதலிலுண்டானதுமான மஹத்தத்துவமான தபுத்தே:=புத்யாரம்பக பூதசூக்ஷ்மங்களைக் காட்டிலும், परः=மிக்கச் சூக்ஷ்மதமமாகவும், வியாபகமாகவும், அழிவற்றதாகவுமிருக்கிறது. महतः= அத்தகைய மஹத்தத்துவத்தைக் காட்டிலும் अव्यक्तम्=ப்ரகிருதியானது परम्=மிக்க மிக்கச் சூக்ஷ்மதமமாகவும், வியாபகமாகவும், அழிவற்றதாகவுமிருக்கிறது. पुरुषः=ஆத்மாவானவன் अव्यक्तात्=அவ்யக்தத்தைக் காட்டிலும் परः=மிக்க மிக்கச் சூக்ஷ்மனாகவும், வியாபகனாகவும், ப்ரத்யகாத்ம பூதனாக (அழியாதவனாக) வும் இருக்கிறான். पुरुषात्=புருஷனைக்காட்டிலும், परम् = சூக்ஷ்மமும், வியாபகமும், அழிவற்றதுமான பொருள் किञ्चित्=ஒன்றும், न=கிடையாது. †सा= அந்தப் புருஷனே काष्ठा=முடிவானவிடமாகவும், सा=அந்தப் புருஷனே परा गतिः=மேலான அடைவிடமாகவும் ஆகிறது. (10-11)

பாஷ்யம்.—இந்திரியங்களோ ஸ்தூலங்கள்(காரியங்கள்) ஆகும். அந்த இந்திரியங்கள் எந்த அர்த்தங் (பூதசூக்ஷ்மங்) களால் தம்மைப்

---

† மூலத்தில் सः=என்று பும்லிங்கமாகப் படிக்கவேண்டியிருக்க सा=என்றது काष्ठा=என்றும், गतिः = என்றுமான விசேஷ்யத்தை யொட்டி ஸ்திரீலிங்கமாகப் படிக்கப்பட்டது என்று கொள்ளவும்.

